# உதிரம் உறைந்த மண்

(ஒரு மாணவப் படுகொலையின் அழியாத சுவடுகள்)

வல்வை ஆனந்தன்




இது ஓர் தமிழ்த்தாய் வெளியீடு

★ வெளியீடு-26
★ உதிரம் உறைந்த மண்
(ஒரு மாணவப் படுகொலையின் அழியாத சுவடுகள்)
★ வல்வை ஆனந்தன்
★ உருவாக்கம் : தமிழ்த்தாய் வெளியீட்டகம்,
முல்லை வீதி, தருமபுரம்,
கிளிநொச்சி.
★ முதற்பதிப்பு : 08.03.1998
★ வெளியீடு : அனைத்துலகச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.
★ முகப்பு ஓவியம் : தயா

★ Published-26
★ UTHIRAM URAINTHA MUNN
(The massacre of school children at Nagarkovil)
★ VALVAI ANANTHAN
★ Compiled by Thamilththai veliyeeddaham,
Mullai veethy,
Tharmapuram,
Kilinochchi.
★ First edition 08.03.1998
★ Published by International Secretariat,
Liberation Tigers Of Tamil Eelam.
★ Printed at :
★ Cover designed by: THAYA

## பதிப்புரை

சிங்களப் பேரினவாதம் தலையெடுத்த காலத்தில் இருந்தே முறைக்கு முறை, படுகொலைகளின் கொடூரத்தால் இந்த மண் துடித்தழுதிருக்கிறது.

சிங்களப் பேரினவாதிகளுக்கு வெறி ஏற்படும் போதெல்லாம் எங்கள் குருதி குடித்தே அவர்கள் வெறியடக்கி வந்திருக்கிறார்கள்.

ஒரு நீண்ட படுகொலைகளின் வரிசையில், நாகர் கோயில் மகா வித்தியாலயம், எதிரியின் குருதிவிடாய் தீர்க்கும் பலிக்களமாகியது. பூவும் பிஞ்சுமாய் செழித்திருந்த 21 பள்ளிச் சிறுவர்கள், கணப்பொழுதில் வெறும் தசைக்குவியலாய் சிதைந்து போனார்கள்.

1995.09.22 அன்று நாகர் கோயில் மகாவித்தியாலயத்தின் மீது சிங்கள வான்படையின் புக்காரா வல்லூறுகள் வீசிச்சென்ற குண்டு களால், பிச்செறியப்பட்ட புறாக்களின் அவலச்சாவை, அந்தப் பச்சை மண்களின் உயிர்கள் தங்களின் கண்முன்னாலேயே கரையும் கொடுமையை அனுபவித்த, அவர்களைப் பெற்றவர்களின் துயரத்தை, இந்த நூல் உணர்ச்சி ததும்பச் சொல்கிறது.

காலையில், மலர்ந்து மல்லிகைப் பூக்களாய் பள்ளிக்குப் போன வர்கள், மாலைக்குள் சிதைந்து, செவ்விரத்தம் பூக்களாய் செத்துப் போன அவலத்தை, தாங்க முடியாது துடிக்கும் தன் ஆன்மாவின் குமுறலை, கண்ணீரையும் குருதியையும் பிசைந்து அழியாத சுவடுகளாக்கியருக்கிறார் நூலாசிரியர் திரு. வல்லை. ஆனந்தன்.

இந்த நூலைப் படிப்பவர்களின் நெஞ்சில் அவலத்தைத் தந்த வனுக்கே அதைத் திருப்பிக் கொடு என்ற சத்தியவாக்கு எதிரொலி க்காமல் இருக்க முடியாது.

"காயம் மாறின பிறகு ஜெய்பபூர்க்கால் போட்டு, அதுக்குக் காற்சங்கிலி போடுவேன்" என்று இரண்டு கால்களையும் இழந்த ஒரு பிஞ்சுப் பெண்ணின் மனவுறுதியே இந்தத்தேசத்தின் அசைக்கமுடியாத ஆன்மபலம் என்பதைச் சுட்டி நிற்கிறது இந்த நூல்.

இந்த நூலின் ஆசிரியருக்கு, இதை ஒரு கலாபூர்வமான இலக்கியப் பதிவாக அமைக்கவேண்டும் என்ற விருப்பைவிட, நெஞ்சைப்பிசையும் அந்த உண்மை நிகழ்வுகளை, அப்படியே காட்சிப்படுத்தும் ஆவண முனைப்பே அதிகம் என்பது, பக்கங்கள் தோறும் தெரிகிறது.

1989 ஆகஸ்ற் திங்கள் 2, 3, 4-ம் நாட்களில் வல்வெட்டித்துறையில் இந்திய இராணுவம் புரிந்த படுகொலைகளை, "வல்வைப் படு கொலைகள்" என்ற வரலாற்று ஆவண நூலாக்கி, இந்திய அமைதிப் படையின் உண்மை முகத்தை உலகிற்குத் தோலுரித்துக் காட்டிய திரு. வல்வை ஆனந்தனின் "உதிரம் உறைந்த மண்" என்ற இந்த நூலை வெளியிட்டு வைப்பதில் நிறைவு அடைகிறோம்.

-தமிழ்த்தாய் வெளியீட்டகம்

# உதிரம் உறைந்த மண்'ணினுள் சுவடுகள் பதிக்கும் முன்னர்...!

1995-ம் ஆண்டு வடமராட்சியில் நாகர்கோயில் மகாவித்தியாலத்தின் மீது மேற்கொள்ளப்பட்ட விமானக்குண்டு வீச்சில் கொல்லப்பட்ட மாணவர்களின் உடல்கள் செங்குருதியில் மிதந்த அந்தக் கோர நிகழ்வுகள் உங்கள் நெஞ்சங்களை ஒரு கணம் நடுங்கவைத்திருக்கும்...!

தலைமுறை, தலைமுறையாக இந்த மண்ணிலே வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு தேசிய இனத்தின் வாரிசுகளை குதறி அழித்த அரசின் கொடூரங்கள் மூடி மறைக்கப்பட்டுவிட்டன.

பத்திரிகைத் தணிக்கையை அமுல்படுத்திவிட்டுத் தமிழர் தாயகத்தில் மேற்கொள்ளப்பட்ட "நாகர்கோயில் மாணவப் படுகொலைகள்" உலகின் கண்களுக்குப் பெரிதாகத் தெரியவில்லை...! குமுதினிப் படகில் குழந்தைகள், பெண்கள் உட்படப் பல அப்பாவித் தமிழர்கள் சிறீலங்கா கடற்படையால் வெட்டிப் படுகொலை செய்யப்பட்ட போது...? உலகம் வாயை மூடி மௌனம் சாதித்தது!

கொக்கட்டிச்சோலையில், சிங்கள இராணுவத்தினரால் ஒரே இரவில் நூற்றுக்கும் அதிகமான தமிழர்கள் படுகொலை செய்யப்பட்ட போது...? உலகம் தன் கண்களையே மூடிக்கொண்டது!

வல்வெட்டித்துறையில் 1986-ம் ஆண்டில் 75 அப்பாவித் தமிழர்கள் கைகள் கட்டப்பட்ட நிலையில் சனசமூகக் கட்டிடம் ஒன்றினுள் வைத்துக் குண்டுவைத்துத் தகர்த்துக் கொல்லப்பட்ட போதும், 1989-ல் வல்வெட்டித்துறையில் இந்திய இராணுவத்தால் பெண்கள், குழந்தைகள், வயோதிபர்கள், பள்ளிச் சிறுவர்கள் உட்பட 75 தமிழர்கள் சுட்டும், எரித்தும் கொல்லப்பட்ட போதும்!

உலகம் உள்நாட்டுப் பிரச்சினையாம் என்று காதைப் பொத்திக் கொண்டு பார்த்துக் கொண்டிருந்தது!

நவாலி சென் பீற்றேர்ஸ் தேவாலயத்தில் புக்காரா போர் விமானங்கள் மிலேச்சத்தனமாகக் குண்டுகளைப் பொழிந்து நூற்றுக்கணக்கில் தமிழர்களைக் கொன்று சின்னா பின்னப்படுத்திய போதும்...?

சமாதானம் பேசுகின்ற உலகம் தாராளமாக போர் விமானங்களை யும், குண்டுகளையும் வாங்க நிதி வழங்கியது!

இந்த வரிசையில்தான் பள்ளிக்கு வந்த மாணவர்கள் உயிர்களைக் காவு கொண்ட "நாகர் கோயில் மாணவப் படுகொலைகளும்" நடத்தி முடிக்கப்பட்டன!

உலக அமைதிக்கான நிறுவனம் என்றும், சட்டம் ஒழுங்குகளைப் பேண உதவும் அமையம் என்றும், மனித உரிமைகளைக் காக்கும் நிறுவனம் என்றும் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டிருக்கும் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் கூட பச்சைக் குழந்தைகளின், இந்தப் படுகொலைகளை ஏன் தட்டிக் கேட்கவில்லை என்று, இன்று உலகத் தமிழினம் கேட்கத் தொடங்கிவிட்டது!

எமது மண்ணிலே, எங்களுக்கெதிராக நடந்து கொண்டிருக்கின்ற இந்தப் படுகொலைகள், அராஜகங்கள், சித்திரவதைகள், ஆக்கிரமிப்பு யுத்தங்கள், பொருளாதாரத் தடைகள் மற்றும் அனைத்து ஒடுக்கு முறைகளும் ஒழிக்கப்பட வேண்டும் என்ற குரல் இன்று உலகெங்கும் ஒலிக்கத் தொடங்கிவிட்டது.

"உதிரம் உறைந்த மண்" என்ற நாகர்கோயில் மாணவப் படுகொலை கள் பற்றிய இந்த நூலை எழுதுவதற்கு உறுதுணையாக இருந்து உதவிகள் புரிந்த எனது நண்பர்கள், நாகர் கோயில் மக்கள், மகா வித்தி யாலய அதிபர், ஆசிரியர்கள், பிள்ளைகளைப் பறிகொடுத்த சோகத்தி லுங் கூட எனக்குத் தகவல்களைத் தந்து உதவிய பெற்றோர்கள், தமது தோழர், தோழியர், சகோதரர்களின் பிரிவின் இறுதிச் சம்பவங்களை விவரித்த மாணவர்கள், அம்பன்,பருத்தித்துறை வைத்தியசாலை டாக்டர் கள், தாதிகள் அனைவரும், என்றும் நன்றியுடன் போற்றப்பட வேண்டிய வர்கள்...!

இந்த நூலுக்கான அட்டை ஓவியத்தை வரைந்த ஓவியர் தயா

அவர்களுக்கும், இந்த நூலை சிறந்த முறையில் பதிப்பித்து வெளியிட்டு வைக்கும் தமிழ்த்தாய் வெளியீட்டகத்தினருக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றிகள்.

-வல்வை ஆனந்தன்-
20.04.1997

1995.09.22ம் திகதி...

கிழக்கு வானில் உதித்த சூரியன் மெல்ல மெல்ல மேலே எழுந்து தலையை நீட்டிக் கொண்டிருந்தான்.

"டாண்... டாண்... டாண்..."

அந்தக் கிராமத்தின் மூலை முடுக்கெங்கும், அந்த மணியோசை கேட்டதும் வண்ணத்துப் பூச்சிகள் தம் அழகான சிறகை அடித்துப் பறந்து செல்வது போல், அந்தப் பிஞ்சுக் குழந்தைகள் தம் புத்தகப் பைகளையும் தூக்கியபடி வெள்ளைச் சீருடையுடன் பள்ளிக்கூடத்தை நோக்கிக் குதூகலித்து ஓடிக்கொண்டிருந்தன...

நாகர் கோயில் மகாவித்தியாலயம்...!

ஆம்!... நாகர் கோயிலின் அழகான வெண்மணற் பரப்பையும் தாண்டிக் கம்பீரமாக எழுந்து நிற்கும் அந்தப் பாடசாலைதான் பெரிய பாடசாலையாக விளங்குகின்றது.

பருத்தித்துறையில் இருந்து கிழக்கே பத்து மைல் தூரத்தில் போக்குவரத்து, மின்சாரம், மருந்து, கல்வி வசதிகள் குறைந்த நிலையில் வாழ்வதற்கான போராட்டத்தை மேற்கொண்டிருக்கும் ஏழைத் தொழிலாளர்களைக் கொண்ட அந்தச் சின்னஞ்சிறிய கிராமம் தான் நாகர் கோயில்... அங்கே தான் வரலாற்றுப் புகழ் பெற்ற நாகதம்பிரான் ஆலயம் பிரதான வீதிக் கருகில் கம்பீரமாக எழுந்து நிற்கின்றது...

வடமராட்சியின் கிழக்குப் பிரதேசம் பொன் கொழிக்கும் பூமி என்றும், வளம் நிறைந்த மண் என்றும் கவிஞர்கள் வர்ணிப்பது போல் பெரிதாக இல்லாவிட்டாலும், அங்கே முத்துக்கம்பளம் விரித்தால் போல் படர்ந்திருக்கும் வெண் மணற்பரப்பைப் போன்று, வெள்ளை மனம் படைத்த உள்ளங்கள் நிறைந்த மண் என்பதை ஒரு தடவை சென்றவர்களே

உணர்ந்து கொள்வர்...ஆம்!... அங்கே கள்ளங்கபட மற்ற மக்களை... உழைத்து, உழைத்து ஓடாகி உருக்குலைந்த மக்களைக் காணலாம்...

அந்தப் பாடசாலை ஆரம்பமானதற்கு அறிகுறியாக பாடசாலையின் "கணீர்" என்ற மணியோசையைத் தொடர்ந்து, அந்த மக்களின் குழந்தைகள் துள்ளி ஓடிக்கொண்டிருக்கின்றன...

"டேய்...தம்பி கெதியாவா!... பள்ளிக்கூடத்திற்கு நேரம்போயிற்றுது... முதல் மணியும் அடிச்சுட்டுது... பிறேயர் தொடங்கப்போகுது... கெதியா ஓடி வா..."

அந்த வெண்மணற் பரப்பினூடாகத் தாண்டி ஓடிக் கொண்டிருந்த சாந்தி, தன்னுடைய தம்பி கோபிதரனைத் துரிதப்படுத்தியபடி விரைந்து கொண்டிருந்தாள்...

"சாந்தி... அந்த மகாவித்தியாலயத்தில் பதினோராம் ஆண்டு படித்துக் கொண்டிருந்தாள்... இந்த ஆண்டு க.பொ.த. சாதாரண தர பரீட்சை எழுதுவதற்காகப் படிக்கிறாள்... அவளுக்கு அடுத்தவன் தான் கோபிதரன்... அவன் பத்தாம் ஆண்டு படித்துக் கொண்டிருக்கிறான்... பாடசாலை போகாத நேரங்கிளில் தன்னுடைய தந்தைக்கு வேண்டிய எல்லா உதவிகளையும் சுறுசுறுப்பாகச் செய்து கொண்டிருப்பான்.

"பொறு அக்கா!... ஏன் அவசரப்படுகிறாய்.? இண்டைக்கு வெள்ளிக் கிழமை தானே. சிவபுராணம் படிக்கவே எவ்வளவு நேரம் போய்விடும்..." அவன் சிரித்துக் கொண்டே தன்னுடைய அக்காளைப் பார்த்துச் சொன்னான்.

"ம்...ம்...நல்லாத் தான் சொல்லுவாய்... இண்டைக்கு எங்கட வகுப்பல்லோ சிவபுராணம், பூசை ஒழுங்கு எல்லாம் செய்யிறது. கெதியாவாடா..."

சாந்தி, தம்பியைச் செல்லமாகக் கடிந்து கொண்டே விரைந்து கொண்டிருந்தாள்.

அவர்களுடன் வேறும் சில மாணவர்கள் தம் புத்தகப் பைகளைச் சுமந்து கொண்டு பாடசாலையை நோக்கி ஓடிக் கொண்டிருந்தனர். அவர்கள் வாசலை நோக்கிக் கால் அடி வைக்கவும் இரண்டாவது மணியும் அடித்து அன்றைய வெள்ளிக்கிழமைப் பிரார்த்தனை தொடங்கி விட்டது.

"...ஈசனடி போற்றி, எந்தையடி போற்றி...
தேசனடி போற்றி... சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலனடி போற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னனடி போற்றி..."

சிவபுராணம் முற்றோதல் நடந்து கொண்டிருந்தது... அந்தப் பள்ளியின்

முகப்பில் உள்ள சிறிய முற்றத்தில் மாணவர்கள் எல்லோரும் கை களைக் கூப்பியபடி நிற்க. எதிரே நின்று பதினோராம் ஆண்டு மாணவி கள் சிவபுராணத்தைப் பாடிக் கொண்டிருந்தனர். அவர்கள் ஒவ்வொரு அடியாகச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்க, ஏனைய மாணவர்கள் அவ்வடிகளைத் திரும்ப உரத்துச் சொல்லிப் பாடிக் கொண்டே இருந்தனர்.

ஓ... அந்த மதுரமான தேவகானம் அந்தக் கிராமத்தின் மெல்லிய காற்றின் ஊடாக அங்குள்ள மக்களின் காதுகளில் ஒலித்துக் கொண்டே இருந்தன...

நாகர் கோயில் மகா வித்தியாலயம் மருதங்கேணிக் கோட்டத்தில் உள்ள 22 பாடசாலைகளில் இரண்டாவது பெரிய பாடசாலை... அங்கு 413 ஆண்களும், 400 பெண்களுமாக 813 மாணவர்கள் கல்வி கற்றுக் கொண்டிருந்தனர். ஆண்டு ஒன்று முதல் பதினோராம் ஆண்டு வரை உள்ள இந்தப் பாடசாலைக்கு முன்னர் உள்ள காலங்களில் வந்து போகும் அதிபர்கள் பதவி உயர்வுக்காகவும், தமது ஓய்வுக் காலத்திற்கு பயிற்சி எடுப்பதற்கான பாடசாலையாகவும் இதனைப் பயன்படுத்தி வந்ததாக இங்கே கூறிக்கொள்ளுவார்கள்... இப்பொழுது ஒன்றரை வருடமாக மகேந்திரன் என்பவர் அதிபராக வந்த பிறகு அவர் கட்டமைப் பிலேயே பல மாற்றங்கள் ஏற்பட்டு விட்டன என்பதைப் பாடசாலை நடைமுறைகளில் இருந்தும், மாணவர்களின் நடத்தைக் கோலங்களில் இருந்தும் கண்டு கொள்ளலாம்.

"இப்ப இந்த அதிபர் வந்தாப்பிறகு நல்ல ஊக்கம்... இப்ப பிள்ளை யள் பள்ளிக்கூடத்திற்குப் போகாமல் நின்றால், அதிபர் அடுத்த நாள் வீட்டுக்குப் போய்க் கூப்பிட்டுக் கேட்பார்... அந்தப் பயத்திலை பெற்றோர் எப்பிடி எண்டாலும் தங்கடை பிள்ளைகளைப் பாடசாலைக்கு அனுப்பி வைத்து விடுவினம்..."

அந்தப் பாடசாலையின் அதிபரைப் பற்றியும் பள்ளிக்கூட நடை முறைகளைப் பற்றியும் அம்பன் அரசினர் மருத்துவ மனையின் மருத்துவ மாது கூறிய உண்மையின் பொருளை அந்த மாணவர்களின் வெளிப்பாடுகள் காட்டிக் கொண்டிருந்தன...

அவர்கள் மிக அமைதியாக நின்று கைகளைக் கூப்பியபடி சிவ புராணத்தை மிகத் தெளிவாக உச்சரித்துப் பாடிக் கொண்டிருந்தனர்...

அந்தப் பாடசாலையின் அதிபர் திரு. ச. மகேந்திரன், அந்த மாணவர் களின் பின்புறம் நின்று கைகளைக் கட்டியபடி இறைவனைத் தியானித்தக் கொண்டு நின்றார்.

"சேர்... சிவபுராணம் பாடி முடிஞ்சுது... பிள்ளைகளின்ரை விளையாட்டுப் போட்டிப் பரிசுகளை இதிலையே குடுக்கிறதோ...? "மாணவிகளின் அருகில் நின்று பிரார்த்தனையில் கலந்து கொண்டிருந்த உப அதிபர். செல்வி. அன்னலட்சுமி கந்தசாமி அதிபருக்குக் கிட்ட வந்து கேட்டார்.

"ஓம் ரீச்சர்...கோட்டமட்டத்து விளையாட்டுப் போட்டிக்களுக்கான பரிசுகளையும் சான்றிதழ்களையும் இன்றைக்கே கொடுத்து விடுவம்... கொஞ்சம் பொறுங்கோ... நான் அவற்றை எடுத்துக் கொண்டுவாறன்." அதிபர் புன்னகையுடன், அவற்றை எடுப்பதற்காக அலுவலகத்தை நோக்கி விரைந்தார்.

"ரீச்சர்...பரிசுகளைக் கொடுக்கிறதுக்கு முதல் பிள்ளைகள் ஆயத்தப் படுத்திய பேச்சுக்கள், பாட்டுக்கள் மற்ற நிகழ்ச்சிகளை முடித்துவிட்டு பிறகு கடைசியாகக் கொடுத்து விடுவம்..."

அதிபர், மாணவர்களின் சான்றிதழ்களையும், பரிசுப்பொருட்களையும் கையில் கொண்டு வந்தபடி உப அதிபரை நோக்கிக் கூறினார்... வெள்ளிக் கிழமைகளில் மாணவர்களின் நற்சிந்தனைகள், நினைவு, உரைகள், பாடல்கள் இடம்பெறுவது வழக்கம்...

அதனைத் தொடர்ந்து மாணவர்களின் நிகழ்ச்சிகள் இடம்பெற்றன... "நமக்காக வாழாது பிறருக்காக வாழ்வதே மானிடப் பிறப்பின் மகிமை யாகும்... என்னரும் சகோதரர்களே... இந்த மண்ணிலே நாம் பிறந்தோம் மடிந்தோம் என்று இருக்காது, பிறந்தோம், மற்றவர்களுக்காக வாழ்ந்து மடிந்தோம் என்ற நல்ல பெயருடன் போகவேண்டும்... பாரதம் பெற்ற மகாத்மா காந்தி... எமது நாடு பெற்ற திலீபன் போன்றவர்கள் இந்த மண்ணிலே மகாத்மாக்களாக வாழ்ந்து போயிருக்கின்றார்கள்... அந்த மகாத்மாக்கள் காட்டிச்சென்ற வழியை நாம் தொடர வேண்டும்..." பலத்த கரகோசத்தின் மத்தியில் பன்னிரண்டு வயதே நிரம்பிய ஏழாம் ஆண்டு படிக்கும் மாணவி ந. உமாதேவியின் உரையுடன் அந்த நிகழ்ச்சிகள் முடிந்தன... அதனைத் தொடர்ந்து, மருதங்கேணிக் கோட்ட பாடசாலை மட்டங்களுக்கிடையே நடைபெற்ற மெய்வன்மைப் போட்டியில் முதலிடம் பெற்ற மாணவர்களுக்கான பரிசுகளையும், சான்றிதழ்களையும் அந்தந்த வகுப்புக்களின் ஆசிரியர்கள் வழங்கிக் கௌரவித்துக் கொண்டிருந்தனர்.

பரிசில்களைப் பெறும் மாணவர்களின் விபரங்களை அதிபர் வாசித்துக் கொண்டிருந்தார்.

"ஸ்ரீவித்தியா ஆண்டு எட்டு...முதலாம் இடம் 100 மீற்றர் ஓட்டம்..."

மாணவர்களின் கரகோசத்தின் மத்தியில், ஸ்ரீவித்தியா தனது வகுப்பாசிரியையிடமிருந்து சான்றிதழை வாங்கச் சென்றாள்...

"மா.நாகலோசினி ஆண்டு ஐந்து...முதலாம் இடம் 100 மீற்றர் ஓட்டம்..."

அதிபர் பெயரை வாசித்ததும், நாகலோசினி ஓடி வந்து தலையைச் சரித்து செல்வி. சாரதா ஆசிரியையிடம் இருந்து பரிசுப் பொருட்களை யும், சான்றிதழையும் வாங்கிச் சென்றாள்.

"இ. உமாகாந்தன் பத்தாம் ஆண்டு... முதலாம் இடம் 1500 மீற்றர் ஓட்டம்... முதலாம் இடம் 1800 மீற்றர் ஓட்டம்...இது மட்டுமல்ல இவர் யாழ்ப்பாண மாவட்டத்திலும் முதலாம் இடம் பெற்று சாதனையை நிகழ்த்தி எமது பாடசாலைக்கும், பெற்றோருக்கும் பெருமை சேர்த்துத் தந்துள்ளார்..."

அதிபர் பெருமையுடன் கூறியபடி அந்த மாணவனைப் பார்த்து ஒரு புன்னகையை உதிர்த்து விட்டார்.

அந்த மாணவர் கூட்டத்தில் நின்ற உமாகாந்தன் கம்பீரமாக எழுந்து நடந்து வந்து, வகுப்பு ஆசிரியை திருமதி. அ. புவனேந்திரனிடம் இருந்து பரிசில்களையும் சான்றிதழ்களையும் குனிந்து, வணங்கிப் பணிவுடன் வாங்கினான். பெருமையினால் உள்ளம் சிலிர்த்துப் போன புவனேந் திரன் ரீச்சர் அவனுடைய முதுகில் ஆசையுடன் தட்டிக் கொண்டே, "கெட்டிக்காரன்" என்று கூறியதும், உமாகாந்தன் சிரித்துக்கொண்டே, "தாங்க் யூ ரீச்சர்" என்று கூறிவிட்டு திரும்பிய பொழுது எழுந்த கரகோசம் அடங்கச் சில வினாடிகள் பிடித்தது.

அன்றைய அந்தக் காலைப் பொழுது, நாகர் கோயில் மகா வித்தியா லய மாணவர்களையும் ஆசிரியர்களையும் களிப்பில் ஆழ்த்திய படி மலர்ந்து கொண்டிருந்தது...

"சரி... பிள்ளைகள் இத்துடன் இன்றைய இந்த நிகழ்ச்சிகள் எல்லா வற்றையும் முடித்துக்கொள்வோம்... ஒவ்வொரு மாணவர்களாக அமைதி யாக வகுப்புகளுக்குச் செல்லுங்கள்..."

அதிபர் திரு.ச. மகேந்திரன் மாணவர்களை நோக்கிக் கூறிவிட்டு, மீதியாக உள்ள சான்றிதழ்களையும், பரிசுப் பொருட்களையும் எடுத்துக் கொண்டு அலுவலகத்தை நோக்கி நடந்தார்.

மாணவர்கள் வகுப்பறையை நோக்கிச் சென்றதும், பாடம் ஆரம்பிப் பதற்கான மணி கணீர் என்று ஒலித்தது... அதனைத் தொடர்ந்து அன்றைய வகுப்புகள் வழமைபோல் கலகலப்பாக இயங்கத் தொட ங்கின. ஆசிரியர்கள் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டே இருந்தனர். அந்தப் பாட நேரத்தில் ஓய்வாக உள்ள ஆசிரியர்கள், அன்று பாடசா லைக்கு விடுப்பில் (லீவு) நிற்கும் ஆசிரியர்களின் வகுப்புகளைத் தேடிச் சென்று படிப்பிக்கத் தொடங்கினர்.

இது, வடமராட்சி கிழக்கிற்கே உரிய தனித்துவமான பண்பு. அது ஒரு கஷ்டப் பிரதேசமாக இருந்த போதிலும் அந்தக் கஷ்டத்தை எவரும் கஷ்டமாக நினைத்து ஒதுங்கி வாழ்வதில்லை... அவர்கள் வெறுமனே ஊதியத்தை மட்டும் எதிர்பார்த்துப் போவதில்லை. மனித குலத்தின் சேவைக்காக என்ற உயரிய நோக்கில், கற்பித்தலே கடமை என்று தொழிற்படுகின்ற ஆசிரியர்களை அங்கே காணலாம். அந்த வகையில் நாகர் கோயில் மகா வித்தியாலய ஆசிரியர்கள் மட்டும் அதற்கு விதிவிலக்காக முடியுமா...?

அன்றைய வகுப்புகள் மிகவும் கலகலப்பாகவும், உற்சாகமாகவும் நடைபெற்றுக்கொண்டிருந்தன. ஐந்தாவது பாடம் முடிந்தபின் சிறிது நேர இடைவேளை விடப்படும்... அந்த நேரம் மாணவர்கள் துள்ளிக் குதித்து விளையாடுவதும், ஆடிப்பாடுவதுமாக ஆனந்தமாகக் களித்துக் கொண்டிருப்பர்... சிலர் தாம் கொண்டு வந்த சாப்பிட்டுப் பொட்டலங்களை அவிழ்த்து வைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருப்பர்...

இடைவேளை முடிவடைவதற்கான நேரம் நெருங்கிவிட்டதை உணர்த்தவோ என்னவோ அலுவலகத்தினுள் இருந்த அதிபர் மெதுவாக வெளியே வந்து எட்டிப் பார்த்தார்.

"டாண்... டாண்.. டாண்... " அவர் வெளியே வந்து தன்கையில் கட்டியிருந்த மணிக்கூட்டைப் பார்க்கவும். ஆறாவது பாடம் தொடங்குவதற்கான மணி கணீர் என்று ஒலித்தது.

நேரம், அப்பொழுது 12மணி 20 நிமிடமாகி விட்டிருந்தது... அந்த மணிச்சத்தத்தைக் கேட்டதும், மகுடியின் இசைக்குக் கட்டுப்பட்ட பாம்புபோல், துள்ளிக்குதித்துக் கும்மாளம் அடித்துக்கொண்டிருந்த மாணவர்கள், அமைதியாகத் தத்தமது வகுப்புக்களுக்குச் சென்றனர். அவர்களைத் தொடர்ந்து ஆசிரியர்களும் தமக்குரிய வகுப்புகளை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர்.

"உஹீர்ர்... உஹீர்ர்... உஹீர்ர்... "

அந்த அமைதியான சூழலையே குழப்புவது போல் வானத்தில் சிறீலங்கா அரசின் புக்காரா குண்டுவீச்சு போர் விமானங்கள் இரைந்து வட்டமிடத் தொடங்கியது. அந்த இரைச்சல் எல்லோருக்கும் சிறிது மனப் பதற்றத்தை ஏற்படுத்தினாலும், வகுப்புகள் தொடர்ந்து அமைதியாகவே நடைபெற்றுக் கொண்டிருந்தன... பாடசாலை அலுவலகத்தினுள் அமைதியாக இருந்து அன்றைய பணிகளை மேற்கொண்டிருந்த அதிபரால் அந்த இரைச்சலைக் கேட்டுக் கொண்டு தொடர்ந்து அமைதியாக இருக்க முடியவில்லை.

"சேர்... இண்டைக்கும் புக்காரா சுத்துகிறான்... ஏதும் பிரச்சினை கிரச்சினை வருதோ தெரியேல்லை... கடவுளே... இவ்வளவு பிள்ளை களையும் வைச்சுக்கொண்டிருக்கிறம்... முருகா... "

அவர் அமைதியிழந்த நிலையில் அலுவலகத்தை விட்டு வெளியே வந்து, வானத்தை எட்டிப் பார்த்தார். அலுவலக வாசலில் நின்ற கௌரிநாதன் மாஸ்ரரைப் பார்த்துச் சீறியபடி வந்த அதிபரின் மனம் தவித்துக் கொண்டிருந்தது.

"உஹீர்ர்... உஹீர்ர்... உஹீர்ர்..." அந்தப் போர் வெறி கொண்ட புக்காரா விமானத்தின் இரைச்சல் தொடாந்தும் அதிகரித்துக் கொண்டே வந்தது. அந்தப் பிரதேசத்தில் நீண்ட சுற்று எடுத்து வட்டமிட்டபடி பறந்து கொண்டே இருந்ததால், அந்த விமானத்தின் இலக்கை எவராலும் உணர்ந்து கொள்ள முடியவில்லை...

"ரீச்சர்... இண்டைக்குப் பெரிய இரைச்சலோடை சுத்திக் கொண்டி ருக்கிறான், எங்கையேனும் குண்டுகளைப் போடப் போகிறானோ?..."

இயல்பாகவே பயந்த சுபாமுடைய அதிபரின் மனம் அமைதியின்றித் தவித்துக் கொண்டிருந்தது... வகுப்பறையை விட்டு வெளியே வந்து வானத்தை எட்டிப் பார்த்த ஒரு ஆசிரியையை நோக்கிக் கூறியபடியே அடிக்கடி வானத்தை எட்டிப் பார்த்துக் கொண்டு நின்றார்....

"நேற்றும் சேர்... குடாரப்பு பகுதியிலை இருபத்திரண்டு குண்டு களைப் போட்டவங்கள்...அதிலையும் ஏழு அப்பாவிச் சனங்கள் உடல் சிதறிச் செத்துப் போனதுகளாம்... இண்டைக்கும் எங்கையோ போடப் போறாங்கள் போலத்தான் கிடக்கு... இது ஸ்கூல் என்று அவங்களுக்குத் தெரியும் தானே நான் நினைக்கேல்லை சேர்... இங்கை போடுவாங்கள் எண்டு... இங்கனேக்கை என்ன புலிகளின்ர காம்ப் இருக்குதோ... இல்லைத்தானே... யோசிக்காதேங்கோ சேர்... "

அந்த ஆசிரியையின் நம்பிக்கையான பதில், அதிபருக்கு ஏதோ ஒரு ஆறுதலைக் கொடுத்திருக்க வேண்டும்... அவருடைய படபடப்பு கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தது...

"அதுவும் சரிதான் ரீச்சர் எதுக்கும் கொஞ்சம் கவனமாக இருங்கோ... பிள்ளைகளுக்கும் சொல்லி வையுங்கோ... ஏனென்றால் ரீச்சர்... இந்த மிலேச்சனத்தமான அரசு எதையும் செய்யத் தயங்காது. சும்மா குண்டு களைப் போட்டுவிட்டு புலிகளின்ரை முகாம் என்றுகூடப் பிரச்சாரம் செய்வாங்கள்... அவையின்ரை கையுக்கை தானே றேடியோ... ரீவி.. பத்திரிகை எல்லாம்..."

ஆம்!... அந்த அதிபரின் உள்ளத்தின் மூலையில் உறைந்து கிடந்த

சிங்கள அரசின் மீதான அவநம்பிக்கையும், வெறுப்பும் மெதுவாக வெளிக்காட்டத்தான் செய்தது.

"ஒப்பரேசன் லீப் போவேட்" என்ற பெயரில் சிறீலங்கா அரசபடைகள் மேற்கொண்ட தாக்குதலில் நவாலி சென் பீற்றேர்ஸ் தேவாலயத்தின் மீது புக்காரா குண்டுத் தாக்குதலை நிகழ்த்தி இருநூறுக்கும் மேற்பட்ட அப்பாவிப் பொதுமக்களையும், குழந்தைகளையும், பள்ளிச் சிறுவர்களையும், வயோதிபர்களையும் கோரமாகக் கொன்று அழித்துவிட்டு, அப்படியான ஒரு சம்பவமே நடக்கவில்லை என்று அப்பட்டமாகவே பொய்ப் பிரச்சாரம் செய்த சிறீலங்கா அரசு, இந்த உண்மையை வெளி உலகுக்கு அம்பலப்படுத்தியதற்காக, அனைத்துலகச் செஞ்சிலுவைச் சங்க கொழும்புப் பிரதிநிதியின் மீது கண்டனத்தையும் அல்லவா தெரிவித்து, அந்தப் படுகொலையை மூடிமறைக்கப்பார்த்தது...

அந்த நவாலிப் படுகொலையில் பத்துக்கும் மேற்பட்ட ஆசிரியர்களும், ஐம்பதுக்கு மேற்பட்ட மாணவர்களும் கோரமாக உடல் சிதறிப் பலியாகி இருந்தனர்... அந்தத் துயரமான கோரச் சம்பவம் அவருடைய உள்ளத்தில் ஆழமாகப் பதிந்திருந்ததாலோ என்னவோ அதிபர் மகேந்திரனால், அமைதியாக இருக்கமுடியவில்லை.

"சே...பொம்பர் வட்டமிட்டுக் கொண்டிருக்கேக்கை விட்டாலும் ஆபத்து... பலாலியில் இருந்து ஆட்டிலறி செல்லாலையும் அடிக்கிறாங்கள்..."

அவர் மனத்தினுள் நினைத்துக்கொண்டே, பதற்றமடைந்த நிலையில் கைகளைப் பிசைந்தபடி அங்குமிங்குமாக நடந்து திரிந்துகொண்டிருந்தார்.

அந்தப் புக்காரா விமானத்தின் உறுமல் வரவர அதிகரித்துக் கொண்டே வந்தது...

"டமார்...டமார்..." வானமே இடிந்து விழுவது போல் அந்தப் பாடசாலை கட்டிடம் அதிர்ந்து கொண்டிருந்தது... ஓ... அந்தப் புக்காராவில் இருந்து போடப்பட்ட முதலாவது குண்டு பெருத்த சத்தத்துடன் பாடசாலைக்குள் கிழக்குப் புறமாக உள்ள ஏழு புளியடிப் பக்கமாக விழுந்து வெடித்தது.... இது பாடசாலையில் இருந்து 300 யார் தூரத்தில் இருக்கின்ற நாவல் மரங்கள் நிறைந்த இடம். முதலாவது குண்டைப் போட்டுவிட்டு மிகவும் உயரத்தில் பறந்தபடி வட்டமிட்டுக்கொண்டே இருந்தது.

"ரீச்சர்... பார்த்தியளோ...? நான் சொன்னன்... அங்கை கிழக்குப் பக்கமாகப் போட்டுட்டான் போல... பிள்ளைகளை வெளியே வந்து விழுந்து படுக்கச் சொல்லுங்கோ... இப்ப பறந்து கொண்டே இருக்கிறான்... அடுத்த குண்டை எங்கை போடப்போறானோ... முருகா..."

அதிபரின் முகம் வியர்த்துக்கொண்டு வந்தது... என்ன செய்வது என்று தெரியாமல் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தார்.

"ஏய்!...பிள்ளைகள் பொம்மர் குண்டு போடுறான்... அப்பிடியே விழுந்து படுங்கோ..."அதிபர் அங்குமிங்கும் ஓடியபடி இரைந்து கொண்டிருந்தார். ஆசிரியர்களும் என்ன செய்வது என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தார்கள்.

"பிள்ளைகள்... உங்களைக் கும்பிட்டன் எல்லாரும் அப்பிடியே விழுந்து படுங்கோ..." அதிபரின் அலறல் அங்கே எழுந்த கூக்குரல்களின் மத்தியில் எவருக்குமே கேட்டதாகத் தெரியவில்லை.

அன்று பாடசாலைக்கு சமூகமளித்திருந்த 700 மாணவர்களினதும், ஓவென்ற அழுகுரல்களும், கூக்குரல்களும் வானத்தையே பிளந்து அதிரவைத்துக் கொண்டிருந்தன.

அந்தப் பாடசாலையே அல்லோலகல்லோலப்பட்டுக் கொண்டிருந்தது. அதிபராலோ, அங்கே பரபரத்துக் கொண்டு நின்ற ஆசிரியர்களாலோ, மாணவர்களின் பதற்றத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

"ஐயோ ரீச்சர்... எனக்குப் பயமாக்கிடக்கு... பிளேன் குண்டுபோடுது... அம்மாட்டைப் போகப்போறன்... ஆ...ஆ...அம்மா..."

மூன்றாம் ஆண்டில் படித்துக் கொண்டிருக்கின்ற பிஞ்சுக் குழந்தை ஒன்று அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்த தன்னுடைய வகுப்பு ஆசிரியையின் சேலைத் தலைப்பை இறுகப் பிடித்தபடி அழுது கொண்டிருந்தது....

"பயப்படாதேங்கோ பிள்ளை... பொம்மர் போனாப் பிறகு அம்மாட்டைப் போகலாம்..."

அந்த ஆசிரியையின் நெஞ்சில் துயரம் பொங்கி வழிந்து கொண்டிருந்தது...அந்தப் பெண் குழந்தையைத் தூக்கிச் சென்று பின் புறமுள்ள கொட்டகையினுள் முகம் குப்புறப் படுக்க வைத்துவிட்டு மீண்டும் தன்னுடைய வகுப்புப் பிள்ளைகளைப் பார்ப்பதற்காக ஓடி வந்தார்.

"பிள்ளைகள்... எல்லோரும் சிதறி ஓடாதேங்கோ... முற்றத்திலை விழுந்து அங்குமிங்குமாக முகம் குப்புறப் படுங்கோ..."

அதிபர் கையெடுத்துக் கும்பிட்டபடி அலறிக்கொண்டிருந்தார்.

அங்கே நின்ற ஆசிரியர்களும் திரும்பத் திரும்ப உரத்த குரலில் கத்திக் கொண்டே இருந்தார்கள்... பயமும், பதற்றமுமாக இருந்த அந்தச் சூழலில் அலறித் துடித்துக் கொண்டு திரிகின்ற மாணவர்களை எவராலுமே கட்டுப்படுத்த முடியவில்லை.

"ஐயோ... அம்மா... "

"அம்மா... அக்கா... அண்ணா..."

சில மாணவர்கள் பாடசாலை வாசல்வழியாகச் சிதறி ஓடிக் கொண்டிருந்தார்கள்... சிலர் பின்புறமுள்ள கொட்டகையினுள் போய் நடுவிரல்களால் காதுகள் இரண்டையும் பொத்திப் பிடித்தபடி கைகளைத் தரையில் ஊன்றிக் கொண்டு முகம் குப்புறப்படுத்தனர். அவர்களைத் தொடர்ந்து ஆசிரியர்களும் ஓடிப்போய் விழுந்து படுத்துக் கொண்டிருந்தனர்...

"உஹீர்ர்... உஹீர்ர்... உஹீர்ர்..."

புக்காராவின் இரைச்சல் மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே இருந்தது... மிக நெருக்கமாக சிறிய வட்டமாகச் சுழன்று கொண்டிருந்த அந்த ஸ்ரீலங்கா விமானத்தின் இரைச்சல் காதுகளைப் பயங்கரமாக அதிரவைத்துக் கொண்டிருந்தது...

"சே... இஞ்சனேக்கை புலிகள் இருந்தால் இப்பிடி உவன் எங்களை வெருட்டுவானோ..." அந்தக் கொட்டிலுக்குள் முகம் குப்புறப் படுத்த நிலையில் இருந்த பதினோராம் ஆண்டு மாணவன் கூறிக்கொண்டே மெல்லத் தலையை நிமிர்த்தியபடி வானத்தை பார்த்தான்.

"படார்... படார்..."

ஓ... அந்த விமானத்தின் இரண்டாவது குண்டு பாடசாலையில் தென்கிழக்கு மூலையில் விழுந்து பாரிய சத்தத்துடன் வெடித்தது...

"ஐயோ... அம்மா... ஊ... ஊ..."

அந்த வினாடியில் எழுந்த மரண ஓலம் அந்தப் பிரதேசத்தையே அதிர வைத்தது... ஆம்... விமானங்களின் இரைச்சலினால் அலறித் துடித்துக் கொண்டு சிதறி ஓடி பாடசாலைக்கு எதிரே உள்ள ஆத்தி மரத்தின் கீழும், அதற்குச் சிறிது தூரத்தில் இருந்த புளியமரத்தின் கீழும் வந்து நின்ற நூற்றுக்கும் மேற்பட்ட மாணவர்களின் அலறல்கள், அந்தப் பிரதேசத்தையே ஒரு கணம் நடுங்க வைத்தது.

பாடசாலையின் தென்கிழக்கு மூலையில் போடப்பட்ட அந்தப் பாரிய குண்டு ஆத்தி மரத்தின் மீதும், அதற்கு அருகருகாக உள்ள காளி கோயிலின் மீதும் விழுந்து வெடித்தது... மற்றைய குண்டு பாசாலையில் இருந்து சிறிது தூரத்தில் தள்ளி இருந்த பெரிய புளியமரத்தின் மீது பட்டுச் சிதறி வெடித்தது...

வழமையாகவே அந்தப் பகுதியில் குண்டு வீச்சு விமானங்கள் வட்டமிடும் நேரங்களில் ஊர் மக்கள் கூட அந்த மரத்தின் கீழேயே வந்து நிற்பது வழக்கம்... அந்தப் பழக்கத்தினாலோ என்னவோ அன்றும் அந்தப் பள்ளிக் குழந்தைகள் ஓடி வந்து அந்த மரங்களின் கீழ் நிற்க அந்தக் குண்டுகள் அங்கேயே வெடித்துவிட்டன...

"ஐயோ... அம்மா..."

"அம்மா என்ரை காலைக் காணேல்லை... ஐயோ... வலிக்குது... தண்ணீ... தண்ணீ அம்மா..."

"தண்ணீ... தண்ணீ..."

அங்கே பாதுகாப்புத் தேடி ஓடி வந்த அந்தப் பள்ளிக் குழந்தைகளின் மரண ஓலம் நாகர் கோயில் கிராமத்தின் மூலை முடுக்கெங்கும் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

விமானத்தின் இரைச்சல் தொடர்ந்தும் அதிர்ந்து கொண்டே இருந்தது... அந்த இரச்சலையும் மீறிய நிலையில் பச்சிளம் பாலகர்களின் கூக்குரல்கள் வானத்தைப் பிளந்து கொண்டிருந்தது...

ஓ... அங்கே இரத்த வெள்ளத்தில் துடித்துக்கொண்டிருந்த அந்தப் பிஞ்சுக் குழந்தைகளின் தசைகள் மரங்களின் மீதும் கோயில் சுண்ணாம்புச் சுவர்களின் மீதும் ஒட்டிக் கொண்டிருந்தன.

அங்கே நின்ற மரங்களில் இலைகள், காய்களுக்குப் பதிலாக மாணவக் குழந்தைகளின் துண்டுபட்ட அங்கங்கள் தொங்கிக் கொண்டிருந்தன...

காளி கோயில் சிதைந்து சின்னாபின்னமாகிக்கிடந்தது... அந்தக் குழந்தைகளின் குண்டு பட்ட உடல்களில் இருந்து பீறிட்டெழுந்த செங்குருதி, கோயில் சுவர்கள் மீதும், மரக்கிளைகளின் மீதும் சிவப்பு வர்ணம் பூசியது போல், இரத்தக் கறையால் போர்த்தப்பட்டிருந்தது... மாணவர்களின் வெள்ளைச் சீருடைகள் இரத்தம் தோய்ந்து சிவப்பேறிப் போய்க் கிடந்தது...

புளிய மரத்திற்கு அருகில் நின்ற பனை மரங்கள் முறிந்து சிதறிக் கிடந்தன...

பள்ளிக் குழந்தைகளின் அலறல்கள், முனகல்கள் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கிக்கொண்டு வந்தன.

"ஐயோ... கடவுளே... நாகதம்பிரானே... பள்ளிக்கூடத்துக்குக் குண்டு போட்டுட்டாங்கள் போல..."

கடற்கரையிலும், வீடுகளிலுமிருந்து பார்த்துக் கொண்டிருந்த சனங்கள் அலறித் துடித்துக் கொண்டே ஓடிவந்தார்கள்...

அந்தப் பாடசாலையும் அதன் சுற்றுப்புறமும் ஒரே புகை மண்டலமாக இருந்தது... வெடி மருந்தின் நாற்றம் மூக்கைத் துளைத்துக் கொண்டு வந்தது.... பள்ளியில் பதுங்கியிருந்து படுத்திருந்த நூற்றுக் கணக்கான மாணவர்கள் மேற்குப் புறமாக உள்ள நாவல் மரக்காட்டுப் பகுதியை நோக்கி அவலக்குரல் எழுப்பியபடி ஓடிக் கொண்டிருந்தனர்.

அவர்களுடைய கைகளிலே புத்தகப்பைகள் இல்லை... உயிரைக் கையில் தாங்கியபடி ஓடிக்கொண்டிருந்த அந்தப் பள்ளிக் குழந்தை களின் பரிதாபக் கோலத்தை வானத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்த புக்காரா விமானத்தின் விமானி கண்டிருக்க வேண்டும்.

அந்தப் பிஞ்சுகளின் வெள்ளைச் சீருடைகள் உயரத்தில் பறந்து கொண்டிருக்கும் அந்தச் சிங்கள ஏகாதிபத்தியத்தின் விமானியின் கண் களுக்கு வெள்ளைப் புறாக்கள் துள்ளிப் பறப்பதைப் போல் தெரிந்தி ருக்காதா?

சிங்களப் பேரினவாத அரசின் ஆணை ஒன்றைத் தவிர வேறு எதைப் பற்றியுமே சிந்தித்துப் பார்க்கமுடியாத அந்த விமானி மாணவர்கள் ஓடிக் கொண்டிருந்த திசையை நோக்கி விமானத்தைத் திருப்பி, அவர்களை நோக்கி தொடர்ச்சியாக ஆறு றொக்கற்றுகள் குண்டுகளை வீசினான்....

"ஐயோ... அம்மா..."

ஓ... அங்கும் அந்தப் பச்சிளங் குழந்தைகளின் அலறல் அந்தப் பிரதேசம் எங்கும் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

முருகன் கோயிலுக்கு சிறிது தூரத்தில் உள்ள மணற் பிட்டியில் விழுந்த அந்த றொக்கற்றுக் குண்டுகள் மண்ணில் விழுந்து இடி முழக்கம் போல் ஒலித்துக் கொண்டிருந்தது... குண்டு விழுந்த இடத்தில் உள்ள மணல் துணிக்கைகள் பனை அளவு உயரத்திற்குப் பொங்கிப் பரவாகித்துச் சிதறிக் கொண்டிருந்தது...

ஆம்... அந்தக் கொடூரத்தின் வித்துக்களை அந்த நாகர்கோயில் மண்ணில் விதைத்து விட்டு, புக்காரா விமானம் விரைவாக ஓடி மறைந்து விட்டது...

சந்தனமும், வெண் சாந்தும் அந்த நாகர் கோயில் மண்ணில்... நாத ஒலியும் வேத பாராயணமும் ஒலிக்கும் அந்த நாகதம்பிரான் கோயில் கொண்ட மண்ணிலே, பச்சிளங் குழந்தைகளின் மரண ஓலங்களும், தாய், தந்தையர்களின் அவலக் குரல்களும், ஒப்பாரிகளும் ஒலித்துக் கொண்டே இருந்தன.

அந்த மணற் பிட்டிகளின் மீது பச்சைக் குழந்தைகளின் குருதி வழிந் தோடியிருந்தது. பிய்ந்து தொங்கிய தசைகளும், எலும்புகளும் மணல் மேட்டிலும் நாவல் மரங்களிலும் சிதறிக் கிடந்தன.

"ஐயோ... அம்மா..."அந்தக் குழந்தைகளின் மரண ஓலம் ஓங்கி ஒலித்துக் கொண்டிருந்தது.

அந்த வெற்றிச் செய்தியை சிறீலங்காவின் பாதுகாப்பு பிரதி அமைச்சர் கேணல் அனுருத்த ரத்வத்தைக்கும் ,கொடுங்கோன்மையின்

சின்னமாக விளங்கும் ஜனாதிபதிக்கும் அறிவிக்கவோ என்னவோ அந்தப் போர் விமானம் அந்த இடத்தை விட்டும் விரைந்து சென்று மறைந்தது...

"இன்று நடைபெற்றுக் கொண்டிருக்கும் போர், தமிழ் மக்களுக்கு எதிரான போர் அல்ல... இது சமாதானத்தைக் கொண்டு வருவதற்காகப் புலிகளுக்கு எதிராக நடத்தப்படும் போர் என்பதை தமிழ் மக்கள் உணர்ந்து கொள்ள வேண்டும். இது தமிழர்களை எல். ரீ. ரீ. ஈ பயங்கர வாதிகளின் பிடியில் இருந்து விடுவிப்பதற்கான ஒரு யுத்தமே, யாழ் குடாநாட்டில் நடைபெறுகிறது. இந்த யுத்தத்தில் எந்த ஒரு தமிழராவது பாதிக்கப்படாமலேயே நாம் யுத்தத்தை நடாத்தி வருகின்றோம்... எனவே தமிழ்மக்கள் அரசுடன் இணைந்து செயற்பட்டால் புலிகளை ஒழித்து விடமுடியும்..."

ஆம்... கேணல் அனுருத்த ரத்வத்தையின் அறிக்கை சர்வதேசத்தி ற்கும் ஒலித்து முடிவதற்குள் சென் பீற்றர்ஸ் தேவாலய படுகொலை களும், இந்த குருதியை உறைய வைக்கும் நாகர் கோயில் மாணவப் படுகொலைகளும் நடந்து முடிந்து விட்டன.

பாடசாலையின் தெற்குப்புறமாக நின்ற புளிய மரத்தின் கீழும், கிழக்குப் புறமாக உள்ள ஆத்தி மரத்தின் கீழும், மேற்குப் புறமாக உள்ள மண் கும்பியின் மீதும் கொல்லப்பட்டும், காயப்பட்டும் கிடந்த மாணவர்களின் உடல்களையும் சிதைந்த அங்கங்களையும் தேடித் தேடி அந்த ஊர் மக்களும், அதிபர், ஆசிரியர்களும் தூக்கிக் கொண்டே இருந்தனர்.

அந்த ஊரின் அவலமும் ஒப்பாரிகளும் அந்த மண்ணையே அதிர வைத்துக் கொண்டிருந்தன...

தலை விரிகோலமாக அழுது குழறும் தாய்மார்களும்... மண்ணில் உருண்டு, கதறி அழும் உடன்பிறப்புக்களும், தலையைப் பிய்த்துக் கொண்டு மரங்களிலும், சுவர்களின் மீதும் தலையை மோதி உடைத்துக் கொண்டு கதறி அழும் தந்தையர்களுமாக.. தள்ளாத வயதிலும் விழுந்து விழுந்து ஒப்பாரி வைத்துக் கொண்டு தேடித் திரியும் வயோதிபர்களுமாக அந்த ஊரே மரண வீடாகிக் கொண்டிருந்தது...

கண் மூடி விழிக்கு முன்பே, அந்த மண்ணின் இருபத்தியொரு பச்சிளம் குழந்தைகளினதும், மூன்று அப்பாவி மக்களினதும் படு கொலைகள் நடந்து முடிந்துவிட்டன.

ஆம்... ஒரு கொடூரத்தின் எச்சத்தின் சின்னமாக அந்த நாகர்கோயில் அன்று காட்சி அளித்துக் கொண்டிருந்தது... அந்த மண்ணில்

மனிதர்களின் முகங்கள் மட்டுமல்ல அங்குள்ள மரங்களும்... பறவைகளும்... மிருகங்களும் அல்லவா சோக இசை ஒலித்துக் கொண்டிருக்கின்றன...

ஒரு படுகொலை நடத்தி முடிக்கப்பட்ட அந்த நாகர் கோயில் மண்ணில் காலடி வைக்கும் பொழுதே எங்கள் கால்கள் நகர மறுக்கின்றன... எங்களுடைய இதயம் விம்மித் துடிக்கின்றன... அந்தப் படுகொலைகள் பற்றிய விவரத்தை அறிவதற்காகச் சென்ற குழுவில் அந்த வெண்மணற் பரப்பினூடாக நடந்து கொண்டிருக்கும் பொழுதே என் நெஞ்சு பிழியப்படுவது போல் இருந்தது...

ஆம்... அந்தக் கோரக் கொலைகள் நடந்து முடிந்து இருபது நாட்கள் சென்றும்கூட அந்தச் சோகம் மாறவில்லை...

அந்தப் பாடசாலையின் சுற்றுப் புறமெங்கும் பிண வாடையும், வெடி மருந்து மணமும் மூக்கைத் துளைத்துக் கொண்டிருந்தது...

அந்த மக்களின் மனங்களில் மகிழ்ச்சி திரும்பவில்லை... பாடசாலையும் வெறிச்சோடிப் போய் சோபை இழந்து துயர் வழிய நின்று கொண்டிருந்தது... அந்த மண்ணின் துயரம் தாங்கிய மனிதர்களைப் போல...

அன்று நடந்து முடிந்த கோர சம்பவத்தை நேரில் பார்த்துக் கலங்கிப் போய் இருந்த ஆசிரியர் துரைசாமி கௌரிநாதன்.

"பிள்ளைகள் இடைவேளைக்குச் சாப்பிட்டுத் தண்ணி குடிச்சிட்டு வந்து படிக்க ஆரம்பித்த கையோட 12.40 மணியளவில் புக்காரா பெரிய இரைச்சலோடை சுத்தத் தொடங்கி விட்டது... வட்டமிட்டுக் கொஞ்ச நேரத்திலை அதில் இருந்து போடப்பட்ட முதலாவது குண்டு பாரிய சத்தத்துடன் கிழக்குப் புறமாக உள்ள ஏழு புளியடிப்பக்கம் விழுந்து வெடித்ததும். அந்தச் சத்தத்தைக் கேட்டதும் முதலில் நாங்கள் பயந்து விட்டம்... அப்படியிருந்தும் வேறு எங்கேயோ அடிக்கிறாங்கள் என்று கொஞ்சம் ஆறி இருந்தோம்... அதுக்குப் பிறகு பிள்ளைகளை விழுந்து படுங்கோ என்று அதிபரும், நாங்களும் சத்தம் போட்டுக் கொண்டே இருந்தோம்... விமானத்தின் இரைச்சல் அதிகரித்துக் கொண்டே இருந்ததால் பிள்ளைகளை எங்களால் கட்டுப்படுத்த முடியவில்லை... எல்லாரும் ஓவென்று கதறி அழுதபடி சிதறி ஓடிக்கொண்டிருந்தனர்... பெரிய பொடியங்கள் கொஞ்சம் கட்டுப்பாடாக இருந்தாங்கள்... சின்னப் பிள்ளைகள்தான் அழுது குளறிக் கொண்டிருந்ததுகள்... சிறிது நேரத்துக்குப் பிறகு, பாடசாலையின் தென்கிழக்கு மூலைப்பக்கமாகப் போடப்பட்ட பெரிய குண்டினால் பாடசாலைக் கட்டிடமே அதிர்ந்து ஓடுகள்

சிதறி உடைந்து கொட்டுப்பட்டன... அந்தச் சத்தத்தைத் தொடர்ந்து, நாங்கள் எங்களோடை நின்ற பொடியளைக் கூட்டிக்கொண்டு மேற்குப் புறமாக உள்ள நாவல் காட்டை நோக்கி ஓடிப்போனோம்... எங்களுக்கு முன்னால் ஓடிக் கொண்டிருந்த நூற்றுக்கணக்கான பிள்ளைகளை நோக்கி உறுமிக் கொண்டு பதிந்த புக்காரா றொக்கற் குண்டுகளையும், குண்டுகளையும் பொழிந்து கொண்டு இருந்தது... அது முருகன் கோயிலை அடுத்துள்ள மணல்கும்பியின் மேலும், மரங்கள் உள்ள பகுதியிலும் விழுந்து வெடித்தது... அந்த அதிர்வில் மண் துகள்கள் பனை அளவு உயரத்திற்குப் பறந்து சிதறியது... பிள்ளைகளின்ரை அவலக்குரல்கள் எங்களுக்குக் கேட்டது... அதற்குமேல் எங்களால் ஒரு அடி கூட முன்னோக்கி வைக்க முடியவில்லை. அப்படியே அந்தச் சுடுமணலில் முகம் குப்புறப்படுத்து விட்டோம்... எங்களுடைய உடல் களை மண் துணிக்கைகள் மூடிக்கிடந்ததன." முகம் வெளுத்து பிரமை பிடித்த நிலையில் கூறிக்கொண்டிருந்த கௌரிநாதன் மாஸ்ரர், சிறிது நேரம் கண்களை மூடியபடி அமைதியாக இருந்தார்...

அவருடைய கண்களில் இருந்து கண்ணீர் 'பொல பொல" வென்று வழிந்து கொண்டிருந்தது...

"பொம்மர் போனதும், மீண்டும் எழும்பி வந்து, ஆத்தி மரம், அதற்குப் பக்கத்தில் உள்ள புளியமரம் பக்கம் வந்து பார்த்த பொழுது, எங்களுக்கு அதிர்ச்சியாக இருந்தது. கடவுளே... அந்தக் கொடூரத்தை எங்களாலை நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை... அங்கை எங்கடை பிள்ளை கள், உடல் சிதறிச் சின்னாபின்னப்பட்டு இறந்தும், காயப்பட்டும் கிடந்த னர்... என்னுடைய வகுப்பு மாணவன் கோபிதரன் குடல் வெளியே வந்து இறந்து கிடந்தார்... மரங்களின் கிளைகளில் பிள்ளைகளின் உடல் களும், தசைகளும் தொங்கிக் கிடந்தன..."

அவர் தொடர்ந்து கூறிக்கொண்டிருக்கும் பொழுதே விம்மி, விம்மி அழத் தொடங்கிவிட்டார்... அவரால் தொடர்ந்தும் பேச முடியாது போகவே, அவருக்கு அருகில் நின்ற குருகுலசிங்கம் மாஸ்டர்,

"சுந்தரலிங்கம் சம்மாட்டியாரின் மகன் பழனி, பாடசாலை ஆலையில் குண்டு விழுந்ததும், பயத்தினால் மேற்குப்புறம் ஓடிப் போகும் பொழுது காட்டுப் பகுதியை நோக்கிப் போட்ட றொக்கற் குண்டினால், படுகாய மடைந்து துடித்துக்கொண்டிருந்தான்... அந்தப் பிள்ளையின்ரை உதடு கள் தண்ணீர்... தண்ணீர்... என்று முனகிக் கொண்டிருந்தன... நானும் கௌரிநாதன் மாஸ்ரரும் காயப்பட்ட நிலையில் பழனியைத் தூக்கிக் கொண்டு, மயிலை படிப்பக்கத்திற்கு அருகில் உள்ள கொட்டிலில்

படுக்கவைத்துக் காயத்திற்குக் கட்டுப் போட்டுக் கொண்டிருக்கும் பொழுதே அவர் இறந்துவிட்டார்... இப்படியே வேறு ஆட்களும் அங்க ங்கே குற்றுயிர்களாகக் கிடந்தவர்களையும், இறந்தவர்களையும் தூக்கிக் கொண்டு வந்து சேர்த்தனர்... அப்பொழுதுதான் பழனியின் தந்தையான சின்னச்சம்மாட்டியார் வயிற்றில் காயப்பட்ட நிலையில் அங்கே கொண்டு வரப்பட்டார்...

குருகுலசிங்கம் மாஸ்ரர் தொடர்ந்து அங்கே நடந்த சம்பவத்தை விவரித்தார்... காயப்பட்ட நிலையில் அங்கே கொண்டுவரப்பட்ட சின்னச் சம்மாட்டியார் என்று அழைக்கப்படும் சுந்தரலிங்கம் சம்மாட்டியார், தனது மகன் காயப்பட்டுத் துடித்துக்கொண்டிருந்ததைக் கண்டுவிட்டு,ஓவென்று கதறி அழத்தொடங்கிவிட்டார்...

ஐயோ என்ரை மகனைக் காப்பாற்றுங்கோ... என்ரை குடும்பம் எல்லாத்துக்கும் காயம்... கடவுளே... என்ரை பிள்ளையைக் காப்பாற் றுங்கோ...

தனது காயத்தில் இருந்து குருதி பெருகிக் கொண்டிருப்பதையும் பொருட்படுத்தாத சின்னச் சம்மாட்டியார், உரத்த குரலில் அழுது கொண்டிருந்தார். அவர் பெருமூச்செறிந்து அழத்தொடங்கியதும், அவரு டைய வயிற்றில் இருந்து குபீர்... குபீர்... என்று குருதி பெருகிக் கொண்டே இருந்தது.

ஐயோ.. கொஞ்சம் அமைதியாக இருங்கோ... உங்கடை மகனுக்கு காயம் தான்... என்று சொல்லி அவரை ஆறுதல்படுத்தியதாக குருகுல சிங்கம் மாஸ்ரர் கூறிய பொழுது அவருடைய நா உலர்ந்து கொண்டு வந்ததோ என்னவோ, ஒரு மிடறு தண்ணீரைக்குடித்துவிட்டு எங்களை நிமிர்ந்து பார்த்தார்....

காயப்பட்டுத் துடித்துக்கொண்டிருந்த சம்மாட்டியாருக்கு அவருடைய இளைய மகள் தர்சினியும் இறந்துவிட்டதை நாங்கள் சொல்லவில்லை... அவருடைய மனைவி, நாகலட்சுமிக்கு ஒரு கைகளிலும், தொடையிலும் காயப்பட்டு இருந்த நிலையில் இறந்து போன மகளை மடியில் தூக்கிவைத்துக் கதறியழுத காட்சி எங்களுடைய நெஞ்சையே உலுக்கி விட்டது.. கூறிவிட்டுச் சிறிது நேரம் அமைதியாக எங்களை வெறித்துப் பார்த்தபடி இருந்தார். குருகுலசிங்கம் மாஸ்ரர்.

சின்னச் சம்மாட்டியார் சுந்தரலிங்கத்தின் மனைவி நாகலட்சுமி, புக்காரா விமானங்கள் சுற்றுவதைக் கண்டுவிட்டு தனது இரு பிள்ளை களையும் பாடசாலையில் இருந்து கூட்டிச் செல்வதற்காகப் புளியடிப் பக்கம் வந்த பொழுதே, காயப்பட்டவர். அவர்களுடைய பத்து வயது

மகன் சஞ்சீவனும் படுகாயமடைந்து பருத்தித்துறை வைத்தியசாலையில் சிகிச்சை பெற்று வருகிறார்...

அம்பன் வைத்தியசாலையில் திக்பிரமை பிடித்தவர் போல் விறைத்துப் போய் இருந்த நாகலட்சுமியைப் பார்த்ததும், எங்களுக்கே கஷ்டமாகத்தான் இருந்தது.

பொம்மர் சுத்துறதைக் கண்டதும் என்னுடைய ஆறுவயது தர்சினி யையும் கூட்டிக் கொண்டு பள்ளிக்கூடத்துக்கு வந்திருந்த இரண்டு பிள்ளைகளையும் பார்க்கப் புளியடிப்பக்கம் வரவும், பாடசாலை மூலை யில் போட்ட குண்டு, சிதறி என்ரை குழந்தையின் கன்னத்தையும் காலையும் கிழித்துக் கொண்டு சென்றது... அந்த நேரம் என்னுடைய மடியில் விழுந்து அலறியழுத குழந்தை என்ரை கண்ணுக்கு முன்னா லேயே துடித்துத் துடித்துச் செத்தது... ஐயோ கடவுளே... இந்த நாசமாப் போன சந்திரிகா அரசாங்கத்தாலை எவ்வளவு கொடுமைகளை அனுப விக்கிறம். என்ரை மகனும் இதிலை கொல்லப்பட்டது, நான் ஆஸ்பத்திரி யிலை இருக்கேக்கை பத்திரிகையைப் பார்த்துத்தான் அறிந்து கொண்டேன்.

அவர் இதைச் சொல்லிக்கொண்டே, தலையில் அடித்துக்கொண்டு கதறி அழத் தொடங்கிவிட்டார்...

புக்காராவில் இருந்து பாடசாலை மூலையில் குண்டு போடப்பட்ட தும், மாணவிகள் பட்ட அவலத்தை சபாரத்தினம் உதயகுமார் ஆசிரியர் கூறியபொழுது, வேதனையும் ஆற்றாமையும் கலந்து வந்தது...

முதல் குண்டு போட்டதும், மலைமகள் என்ற மாணவி பயத்தினால் அலறிக் கொண்டே எந்த வழியால் ஓடுவது என்று தெரியாது தவித்துக் கொண்டு அலைந்து கொண்டிருந்தாள்... பிறகு முள்ளுக்கம்பி வேலி யைக் கவனிக்காது, அதற்குள்ளாலை பாய்ந்து ஓட முயற்சிக்க, அவளு டைய நீண்ட தலைமயிர், முள்ளுக்கம்பியினுள் சிக்குப்பட்டு தலையை வெளியே எடுக்கமுடியாது அலறிக் கொண்டிருந்தாள்... நாங்கள் ஓடிப் போய் மயிரை இழுத்துப் பார்த்தோம். அது நல்லாச் சிக்குப்பட்டுப்போய் இருந்ததால் வரவேயில்லை... அந்தப் பிள்ளை வலியால் துடித்துக் கொண்டே அலறினாள்... எங்களுக்கோ என்ன செய்வ தென்றே தெரிய வில்லை... மேலே பொம்மரும் இரைந்து கொண்டே இருந்தது...உடனே கத்தரிக்கோலை எடுத்துவந்து, அவளுடைய மயிரை ஒட்ட வெட்டி எடுத்த பிறகே தலையை வெளியே எடுக்க முடிந்தது... பிறகு நான் அந்தப் பிள்ளையையும் இழுத்துக்கொண்டு வெளியே மணலால் ஓடவும் பாடசாலை மூலையில் குண்டு வெடித்துச் சிதறியது... அதுக்குப் பிறகு

பொம்மர் மேற்கை குண்டு போடவும் அப்படியே படுத்திருந்தோம்... எல்லாம் போன பிறகு புளியடிப்பக்கம் வந்து பார்த்தபொழுது... ஒரே இரத்த வெள்ளமாகக் கிடந்தது... மரக்கிளைகளில் கை, கால்கள், தசைகள் தொங்கிக்கொண்டிருந்தன... ஒரு பக்கத்தில் இருபத்தைந்து வயதான சண்முகநாதனின் உடல் சிதறிய நிலையில் மரக்கொப்பில் தொங்கிக் கொண்டிருந்தது...

அந்த வார்த்தைகளை அவர் கூறும் பொழுது, பேயறைந்தவர் போலக் காணப்பட்டார்.

அப்புலிங்கம் சண்முகநாதன் நாகர் கோயில் கிழக்குப் பகுதியைச் சேர்ந்த ஒரு இளம் கடற்றொழிலாளி. அவருக்கு ஒரே ஒரு பிள்ளை... மனைவி இப்பொழு நிறைமாதக் கர்ப்பிணி... தன்னுடைய மகனை, பாடசாலையில் இருந்து கூட்டிச் செல்வதற்காக வந்தபோதே, அவருக்கு இந்தப் பரிதாப மரணம் ஏற்பட்டது.

ஓ... இறைவா...! மரணம் எவ்வளவு கொடூரமானது? பௌத்த தர்மத் தைப் போதிப்பதாகக் கூறிக் கொள்ளும் சிங்களப் பேரினவாத அரசு, தமிழர்களின் உயிர்களை அழிப்பதில் முனைந்து நிற்கின்றது... இதற்குப் பெயர்தான் பௌத்த மதக்கோட்பாடோ...?

நாகர் கோயில் மகா வித்தியாலயத்தின் மேற்குப் புறமாகச் செல்லும் ஒடுங்கிய மணல் பாதை வழியாகச் சென்று கொண்டிருந்த எங்களு டைய மனம் அந்தக் கொடூரமான நிகழ்வுகளை அசை மீட்கவே நடுங்கியது...!

துள்ளி விளையாடிப் பாடி மகிழ்ந்து திரிந்து, இன்று மரணத்தைத் தழுவிவிட்ட கள்ளங்கபடமற்ற பிஞ்சுகளின் பாதங்கள் பதிந்த மண்ணில் நாங்கள் நடந்து கொண்டிருந்தோம்.

எங்களுடன் கூட வந்து கொண்டிருந்த உருத்திரமூர்த்தி அந்தக் குண்டுவீச்சு சம்பவத்தையும் அதனைத் தொடர்ந்து அந்த மக்கள் பட்ட அவலங்களையும் விளக்கிக்கொண்டே, காட்டுப் பகுதியூடாக மணல் மேட்டின் முன்னால் உள்ள "அப்பா கோயிலின்" அருகில் படுகாய மடைந்த கணபதிப்பிள்ளையும், அவருடைய மகன் ரங்கநாதனையும் சந்திப்பதற்காக அழைத்துச்சென்றார்.

எங்களைக் கண்டதும், கணபதிப்பிள்ளை ரங்கநாதன் என்ற 17 வயது மாணவன், தனது இடுப்புப் பகுதியில் காயப்பட்ட நிலையில் வேதனை தாங்காது மெது மெதுவாகத் தாண்டி வந்து கொண்டிருந்தார்.

நான் நாகர் கோயில் அமெரிக்கன் மிஷன் தமிழ் கலவன் பாடசா லையில் பத்தாம் ஆண்டு படிக்கிறன்... குண்டு போட்ட அண்டைக்குப்

பள்ளிக் கூடம் போகவில்லை... அண்டைக்கு மகாவித்தியாலயத்துக்கு முதல் குண்டு போட்டவுடனை நான் பயத்திலை காட்டுப்பக்கமாக ஓடிப்போக, எனக்கு முன்னுக்கு நூறுக்கு மேற்பட்ட மாணவர்கள் கூட்டம் கூட்டமாக அலறித் துடித்து ஓடிக் கொண்டிருந்தார்கள். நாங்கள் ஓடிக்கொண்டிருக்கிறதை பொம்மரில் இருந்து வடிவாப்பார்த்திருப்பான்... ஏனென்றால், நாங்கள் ஓட ஓட விமானத்தின் இரைச்சலும் எங்களை நோக்கி நெருங்குவதுபோல் இருந்தது... நான் பயத்தினால் விழுந்து படுத்துவிட்டேன்.. சிறிது நேரத்தில் தகரத்தில் கல்லுக் கொட்டுவது போல் "கடகட" என்ற ஓசையுடன் பெரிய சத்தம் கேட்டது. என்னுடைய இடுப்பில் ஏதோ மரக்கட்டை பட்டது போல் இருந்தது... அந்த நேரம் கண்ணைத் திறந்து பார்த்ததும் ஒரே புகைமண்டலமாக இருந்தது. மண் கும்பி பனையளவு உயரத்திற்குப் பறந்து சிதறியது... என்னுடைய இடுப்புப் பகுதியில் இருந்து இரத்தம் பீறிட்டுப் பாய்ந்து கொண்டிருந்தது. உடல் முழுவதும் மண்துணிக்கைகளால் மூடப்பட்டிருந்தது.. என்னால் எழுந்து நடக்கமுடியவில்லை. அப்படியே தவழ்ந்து, தவழ்ந்து காட்டுப்பகுதியை நோக்கி நாவல் மரத்து நிழலை அடையவும் மயங்கி விழுந்து விட்டேன்... அந்த மாணவன் காயப்பட்ட அதே நேரத்தில் அப்பா கோயிலடியில் அவனுடைய தந்தை, தியாகராசா கணபதிப் பிள்ளையும் இடுப்பில் காயமடைந்து, மயங்கிய நிலையில் சுடுமணலில் படுத்திருந்தார்.

அங்கே ஒவ்வொருவராகத் தேடி வரும் பொழுது, இராசதுரை, அழகராசா, தர்மகுலசிங்கம், குணபாலசிங்கம் ஆட்கள், மயங்கிக்கிடந்த கணபதிப்பிள்ளையைக் கண்டுவிட்டு, அப்படியே கட்டிலில் வைத்துத் தூக்கிக் கொண்டுபோய் வானில் ஏற்றினார்கள்.

முருகன் கோயில் பக்கம் விழுந்த குண்டினால், அந்த இடத்தில் இருந்த பெருமணல் துணிக்கைகள், நீறுபோல் சாம்பலாகிக் காணப் பட்டது.

அடக் கடவுளே!... மண்ணுக்கும், கல்லுக்குமே இந்தக் கதியென்றால் மனிதருக்கு? அதை நினைத்துப் பார்க்கவே உடல் நடுங்கியது.

ஒரு நாடு, தனது எதிரி நாட்டின் மீது போர் தொடுக்கும் நேரத்திலும், விமானக் குண்டு வீச்சுக்கள் மேற்கொள்ளப்படும் பொழுது கூட, சர்வதேச சட்டங்களுக்கு அமைவாகவே மேற்கொள்ளப்பட வேண்டு மென்பது நடைமுறை.

அகதி முகாம்கள்... தேவாலயங்கள்... முதியோர் இல்லங்கள்... வைத்தியசாலைகள்... பாடசாலைகள்... இவை தவிர்ந்த ஏனைய

இடங்களில் குண்டுகளைப் போடலாம் என்று சர்வாதிகாரி ஹிட்லரே அன்று உத்தரவிட்டாராம்...

இன்று... தமிழீழத்தில் அவையே தேடித் தேடி அழிக்கப்படுகின்றன...!

நாங்கள் நின்ற இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்த கைலாசப் பிள்ளை அழகராசா உயிர்த்துடிப்பற்ற புன்சிரிப்பொன்றை உதிர்த்தபடி கேட்டார்.

என்ன தம்பியவை... இந்த மண்ணைப் பார்த்து அப்படியே மலைச்சுப் போய் நிற்கிறியள்...?

அழகராசா, மயிலிட்டியில் இருந்து இடம்பெயர்ந்து நாகர்கோயில் முகாமில் வசித்துவரும் ஒரு கடற்தொழிலாளி. இவர், இடம்பெர்ந்த மக்களுக்காக பல்வேறு உதவிகளை மேற்கொண்டு வருபவர்.

பார்த்தியளே!... இப்பிடியொரு கொடூரத்தை என்ரை வாழ்நாளில் எப்பவுமே பார்த்ததில்லை... கடவுளே!... இண்டைக்கும் அந்தச் சம்பவங் களே கனவிலும் வந்து கொண்டிருக்குது...

அவருடைய முகத்தில் அந்தக் குருதிச் சுவடுகளின் கலக்கம், இன்னும் தீரவில்லை. அவரையே பார்த்துக் கொண்டிருந்த எங்களுக்கு இது பற்றி விபரங்களைக் கேட்டறிய வேண்டுமென்ற ஆவல் இருந்தது.

அவர் சொன்னார்.

பள்ளிக்கூடப் பக்கம் குண்டு போட்டவுடனேயே, பள்ளிக்கூடப் பிள்ளைகள் கதறித் துடித்துக் கொண்டு மேற்குப் புறமாக மண்பிட்டியை நோக்கி ஓடி வந்து கொண்டிருக்கேக்கை, அந்தப் பிள்ளைகளைக் கண்டுவிட்டுத்தான் புக்காராவில் இருந்து றொக்கற்றுக் குண்டுகளைப் போட்டவன்...

அவருடைய குரலில் உள்ள ஆத்திரம் வார்த்தைகளில் உரத்து வெடித்தது...

ஆம்!... அவர் கூறுவது போல் இலக்குத் தவறிக் குண்டு போடப் பட்டது என்று நாகர் கோயில் மாணவப் படுகொலையை அரசினால் மூடி மறைக்கமுடியாது. வெட்ட வெளியில், மணல் பரப்பில் உள்ள அந்தப் பாடசாலையும், அதனைச் சூழ்ந்துள்ள வெளியும், உயரத்தில் பறக்கின்ற விமானியினால் தெளிவாக அடையாளம் கண்டிருக்க முடியும்...

நான் எங்கடை முற்றத்து வேப்பமரத்தின் கீழ் நிற்கும் பொழுது தான் அந்தக் கொடூரத்தைப் பார்த்தேன்... அதிலை பிள்ளைகள் பட்ட அவலத்தைப் பார்த்து விறைத்துப் போய் நிற்க, என்னுடைய பெறாமகள் சித்திரா, அலறித் துடித்தபடி, "அம்மாவுக்கு காலில் குண்டு பட்டுத்

துடித்துக் கொண்டிருக்கிறா... ஓடி வாங்கோ...” என்று அழுதுகொண்டு ஓடி வந்தாள்... அங்கே என்னுடைய சகோதரி அமிர்தலிங்கம் கமலா தேவி, முழங்கால் சில்லுச் சிதறிக் கால் முறிந்த நிலையில் துடித்துக் கொண்டிருந்தாள்... அந்த நேரம் அங்கே ஓடிவந்த சில மாஸ்ரர்மாரும், ஊர்பொடியன்களும் சேர்ந்து அவவைத் தூக்கிக் கொண்டு, மயிலு படிப்பகத்திற்கு அனுப்பிவிட்டு பள்ளிக்கூடப் பக்கம் ஓடி வரத்தான் அந்தக் கொடூரத்தைக் கண்டோம்...

அவர் கூறிய தகவல்கள் எவ்வளவு கொடூரமானதாக இருந்தாலும், அங்கு நெஞ்சை நெகிழவைக்கும் சம்பவங்கள் கூட நடந்திருக்கின்றன.

ஆத்தி மரத்தடியிலும், புளிய மரத்தின் கீழும் இறந்தும், காயப்பட்டும் துடித்துக் கொண்டிருந்தவர்களை ஒவ்வொன்றாக வானிலும், லொறியிலும் ஏற்றி அனுப்பிக்கொண்டிருந்த போது, அவசர உதவிகள் செய்து கொண்டிருந்தவர்களில் செல்லையா தாமோதரம்பிளளையும் ஒருவராக நின்று களைக்காமல் பணியாற்றிக் கொண்டிருந்தார்....

அவர் காலில் காயப்பட்டுத் துடித்துக்கொண்டிருந்த ஒரு மாணவனைக் கைகளில் தூக்கிக் கொண்டு வானை நோக்கி நடந்து கொண்டிருக்கும் பொழுது, ஒருவர் இழைக்க இழைக்க ஓடிவந்து,

அண்ணே!... உங்கடை மகளும் புளியடிக்குக்கீழே செத்துப் போய்க் கிடக்கு,...

என்று கூறியதும்,

அந்த ஒரு கணத்தில் அவருடைய கண்கள் இருண்டுவர அந்தக் காயப்பட்ட பிள்ளையை அப்படியே மடியில் வைத்தபடி கீழே இருந்து தலையில் அடித்துக் கதறத் தொடங்கிவிட்டார்.

ஓ... அந்தச் சோக சம்பவங்கள் ஒன்றா...?

நாகர் கோயில் மகா வித்தியாலயத்தின் முன்னால் உள்ள வீதி முடியும் சந்தியில் இராசரத்தினத்தின் மகன், உமாகாந்தனுடன், தம்பாப் பிள்ளை கோபிதரன், செந்தில்வேல் ஆகிய மூன்று மாணவர்களும் ஒருவரையொருவர் கட்டிப்படித்தபடி பரிதாபமாக உடல் சிதறிக் கொல்லப்பட்டிருந்தனர்...

செந்தில்வேலின் உருவம் அடையாளம் தெரியாதபடி உருக்குலைந்து போயிருந்தது.... அந்தப் பள்ளி மாணவனின் சட்டைப்பையினுள் மடித்து வைக்கப்பட்டிருந்த, அவனது சகோதரியினால் பாடசாலைக்கு வராமைக்காக எழுதப்பட்ட கடிதத்தைக் கொண்டே இனங் காணப்பட்டதாக அழகராசா கூறிப் பெருமூச்சு விட்டுக் கொண்டார்.

வடமராட்சி கிழக்கில் ஜீவமரணப் போராட்டம் நடத்திக் கொண்டி

ருக்கும் மக்களின் அவலநிலையை அவர் தொட்டுக்காட்டிச் சொன்னது அங்கே நின்றவர்களின் துயரத்தை மேலும் அதிகரித்தது.

ஆத்திமரத்தின் கீழும் புளிய மரத்திற்கு கீழும் பாடசாலைக்குப் பக்கத்திலும் மண்கும்பிக்காட்டுக்குள்ளையும் பள்ளிக்கூடப் பிள்ளைகளும், சனங்களும் காயப்பட்டும், செத்தும் இருந்ததுகளை நாங்கள் ஒவ்வொன்றாக சாக்குகளிலும், வாக்குகளிலும் தூக்கிக்கொண்டு வந்து மயிலு படிப்பகத்திற்கு அருகிலுள்ள கொட்டிலில் அடுக்கிக் கொண்டே இருந்தம், இதுகளை உடனுக்குடனை ஆஸ்பத்திரிக்கு கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். சிலதுகளை இங்கை இருக்கிற அம்பன் மருத்துவமனைக்கு கொண்டு போய்ச் சேர்த்தம். ஆனால், வாகனவசதி சரியாக இல்லாததாலை உடனை அனுப்பமுடியாமல் போய் விட்டது. சம்பவம் நடந்து முடிந்த முக்கால் மணித்தியாலத்திற்குப் பின்னரே சிறிய வான் வந்தது. அந்தச் சிறிய வாகனத்திலேயே காயப்பட்ட 24 பேரை ஒன்றுக்கு மேல் ஒன்று ஏற்றி அனுப்பினோம். ஆஸ்பத்திரிக்கு கொண்டு போறதுக்கிடையிலேயே இரத்தப் பெருக்கினால் சிலர் இறந்து விட்டினம் என்று பிறகு கேள்விப்பட்டம். கனநேரத்துக்குப் பிறகுதான் அம்புலன்சும், லொறிகளும் எழுதுமட்டுவாளிலிருந்து வரத் தொடங்கியது. இதுதான் எங்கட பின்தங்கிய இடத்தின்ரை நிலை.

அவர் சலிப்புடன் கூறிக்கொண்டிருக்கும் பொழுது எனக்கு அருகில் நின்ற உருத்திரமூர்த்தி, வான் ஒன்றும் இல்லை என்றவுடனை எரு ஏற்றியபடி நின்ற ஒரு வண்டிலில் இருந்து எருவைக் கொட்டிவிட்டு அதில் கூடக்காயப்பட்ட பிள்ளைகளை ஏற்றி அனுப்பினம் என்றால் பாருங்கோவன்... என்று போக்குவரத்துவசதி குறைந்த அந்தக் கிராமத்தின் அவலநிலையைக் கூறிக்கொண்டிருந்தார்.

அம்பன் மருத்துவமனை... துயரத்தில் வாழ்கின்ற மக்களுக்கு ஒரு கலங்கரை விளக்கமாக இந்த மருத்துவமனை இயங்கிக் கொண்டிருக்கின்றது. இதன் பொறுப்பதிகாரியாக டாக்டர் சண்முகசுந்தரமும் அவருக்கு உதவி தாதிகளாக கைலாசபிள்ளை இராஜலட்சுமி, வளர்மதி ஆகியோரும் பணியாற்றுகின்றனர். இந்த மருத்துவமனை ஒன்றே அந்த மக்களுக்குள்ள ஒரே ஒரு வைத்திய வசதி வழங்குகின்ற நிறுவனம்... அதை அடுத்து மூன்று மைல் தள்ளி இருப்பது அம்பன் அரசினர் வைத்தியசாலை.

அந்த அரசினர் வைத்தியசாலையிலும் கூட திறமையும் சேவை மனப்பான்மையும் உடைய டாக்டரும், தாதிகளும், ஊழியர்களும் இருந்தும் கூட போதிய மருத்துவ வசதிகள் வழங்கப்படாததாலேயே

இன்றும் முழுமையான வினைத்திறனைக் காட்ட முடியாது இருக்கிறது.

இவ... அம்பன் மருத்துவமனையில் தாதியாக வேலை பார்க்கிறா...

உருத்திரமூர்த்தி எங்களுக்கு எதிரில் புன்சிரிப்புடன் நின்ற இளம் பெண்ணை அறிமுகப்படுத்தியதும் எங்கள் எல்லோருடைய கண்களும் அவரையே பார்த்தன...

21 வயது நிரம்பிய கைலாசபிள்ளை இராஜலட்சுமி அன்பு மருத்துவ மனையில் தாதியாகச் சேவையாற்றுகின்றார். இவரும் மயிலிட்டியில் இருந்து இடம் பெயர்ந்து நாகர் கோயில் 4ம் முகாமில் தமது தாய் தந்தையாருடன் வசித்து வருகிறார்... அன்றைக்கு 12.00 மணிக்கு வேலையை முடித்துவிட்டு வீட்டில் வந்து இருக்கவும், வெளியே நின்ற எனது அண்ணா, பொம்மர் குண்டு போடப்போகிறான் இங்காலை வெளியே வந்து நில்லுங்கோ என்று கத்தியதும், நான் ஓடி வந்து வாசலில் நிற்க மேலே இரைந்து கொண்டிருந்த புக்காரா பள்ளிக்கூட மூலையில் குண்டைப் போட்டதும் ஒரே புகைமண்டலமாக எழுந்தது. இதை என்னால் பார்த்துக்கொண்டு நிற்கமுடியவில்லை.

அம்மா மறிக்க மறிக்க குண்டு விழுந்த திசையை நோக்கி ஓடிப்போ னேன். வைரவர் கோயிலின் முன்னால் நான்கு ஐந்து மாணவிகள் வெள்ளைச் சீருடை முழுவதும் இரத்தம் தோய்ந்து காயப்பட்ட நிலை யில் படுத்திருந்தனர். சிவநந்தினி என்ற பிள்ளையின் கையிலும், நெஞ்சிலும் காயம் உடலில் உணர்ச்சியே இல்லை. அந்தப் பிள்ளை யாலை ஒன்றுமே கதைக்க முடியவில்லை... என்னை வெறித்துப் பார்த்தபடியே இருந்தது. அந்தப் பிள்ளையின் சீருடையின் கீழ்ப் பகுதி யையே கிழித்து காயத்திற்குக் கட்டுப்போட்டுக் கொண்டிருக்க கௌரி நாதன் மாஸ்ரர் வந்து மயிலை படிப்பகத்திற்கு தூக்கிக்கொண்டு போனார். சிறிது தூரம் தள்ளிப் போக புளிய மரத்தின் கீழ் சின்னச் சம்மாட்டியாரின் மனைவி நாகலட்சுமி அக்கா காயப்பட்ட நிலையில் மண்ணில் உருண்டு உருண்டு அழுதுகொண்டிருந்தார். "அவர் ஐயோ. என்ரை கையைப் பிடியுங்கோ என்ரை மகன் காயப்பட்டுச் சாகப்போது அதைப் பாருங்கோ..." என்று கத்தியபடி இறந்துவிட்ட தனது மகளையும் கட்டிப்பிடித்தபடி கதறிக் கொண்டிருந்தா... அவரால் தொடர்ந்து அழவே முடியவில்லை. அவருடைய சேலைத் தலைப்பைக் கிழித்து அவருடைய காயத்தைச் சுற்றிக் கட்டினோம். அதற்கு அப்பால் இன்னொரு பெண் குழந்தை செத்துக் கிடந்தது. புளியமரத்தின் மேலே மரக்கொப்பில் இறந்த சண்முகநாதனின் சிதறிய உடல் தொங்கிக்கொண்டிருந்தது. ஆத்தி மரப்பக்கத்தில் பூலோகராசாவின் மகள் துஷாந்தினியின்

கன்னத்தின் ஊடாகக் குண்டுச் சிதறல்கள் கிழித்துச் சென்ற நிலையில் துடித்துக் கதறிக் கொண்டிருந்தாள். அவள் சிறிது நேரத்தில் எங்கடை கண்ணுக்கு முன்னாலேயே துடித்து துடித்துச் செத்ததைப் பார்த்ததும் எங்களால் அந்த துயரத்தைத் தாங்க முடியாது போய்விட்டது. புளிய மரத்தில் இருந்து சிறிது தூரத்தில் ஒருவர் தன்னுடைய தங்கையைத் தூக்கி வைத்திருந்தபடி இருந்தார். அந்தப் 13 வயதுச் சிறுமியின் கால் துண்டிக்கப்பட்ட நிலையில் இரத்தம் ஆறாகப் பெருகிக் கொண்டி ருந்தது. அந்தச் சிறுமியின் கால் பத்து யாருக்கு அப்பால் தூக்கி வீசப்பட்டிருந்தது. அங்கே காயப்பட்டவர்களுக்கான அவசர முதலுதவி களை நானும் எங்கள் வைத்தியாசலையில் வேலை செய்யும் வளர்மதியும் சேர்ந்து செய்துவிட்டுக் காட்டுப் பக்கமாக ஓடினோம்....

காட்டுப் பகுதியில் போட்ட குண்டின் சிதறல்களினால் இடுப்புப்பகுதி சிதறிப் படுகாயமடைந்து, அலறிக் கொண்டிருந்த ஜோசப் ஜோன்சன் குயிலிதேவியின் மடியில் இருந்து, பால் குடித்த குழந்தை அதிர்ச்சி யினால் தூக்கி எறியப்பட்ட நிலையில் ஐயோ என்ரை பிள்ளை எங்கை அதைத்தாருங்கோ என்று கத்தியபடியே தலையில் அடித்துக் கொண்டே இருந்தார்... ஓ... அந்த அப்பாவித் தாய்க்கு இன்று வரை அந்தக் குழந்தையின் நிலை என்ன என்றே தெரியாத நிலையில் புலம்பியபடி இருக்கின்றாள்...

இராஜலட்சுமி கூறிய சம்பவங்கள் ஒவ்வொன்றையும் நினைக்கவே நெஞ்சம் நடுங்குகின்றது.

அங்கே நின்று முதலுதவி செய்து காயப்பட்ட ஆட்களையும், பிள்ளைகளையும் வானும், அம்புலன்ஸ் வண்டிகளிலும் ஏற்றி அனுப்பிக் கொண்டிருக்கும் பொழுதே எங்கடை சட்டை, உடல் எல்லாமே இரத்தம் தோய்ந்து விட்டது... அந்த நேரம், எங்கடை வைத்தியசாலைப் பொறுப் பதிகாரி டாக்டர் சண்முகசுந்தரம் அவசர அவசரமாக வந்து, ஆஸ்பத்திரி யிலும் கனபோர் காயப்பட்டுக் கிடக்கினம்... குளுக்கோசு ஏற்றவேணும் என்று கூறி என்னையும் வளர்மதியையும் கூட்டிக்கொண்டு சென்றார்.... அங்கையும் கனபோர் காயப்பட்டும், செத்தும் கிடந்ததாலை தொடர்ந்தும் மருந்து கட்டி மந்திகைக்கு அனுப்பும் பணியைச் செய்தோம்....

அந்த இளம் தாதிப் பெண் தொடர்ந்தும் கூறிக்கொண்டே சென்றார். ஆபத்து வேளைகளிலும், அனர்த்த காலங்களிலும் இவ்வாறான உயிர் இழப்புக்களைத் தவிர்ப்பதில் இராஜலட்சுமி போன்ற இளம் யுவதிகளும், இளைஞர்களும் முதலுதவி அவசர சிகிச்சைக் கல்வி பற்றிய அறிவைப் பெற்றிருக்க வேண்டியதன் அவசியத்தை அந்தச் சம்பவம் உணர்த்தியது...

வைத்தியசாலையில் கூட நிலம், கட்டில்கள், சுவர் எல்லாமே இரத்த வெள்ளமாக இருந்தது. அங்கே கூட "ஐயோ... அம்மா... தண்ணீ... தண்ணீ... என்ற அவலக்குரல்களே ஒலித்துக் கொண்டிருந்தன... அங்கேயும் இரு பிள்ளைகள் இறந்துவிட்டனர்..."

இராஜலட்சுமி இதனைச் சொல்லும் பொழுது, கண்களில் இருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

நாங்கள் நின்ற புளியமரத்தின் பட்டைகள் மேல் நூற்றுக்கணக்கான காகங்கள் சத்தமிட்டுக் கொண்டே எதையோ கொத்திக் கொண்டிருந்தன... அவற்றையே பார்த்துக் கொண்டிருந்த என் மனதினில் ஆச்சரியம்...

"நாகர் கோயில் காகங்கள் காய்ந்த மரப்பட்டைகளையும் கொத்தித் தின்னப் பழகிவிட்டனவோ?..."

எங்களுடன் நின்ற அழகராசா வரட்டுப் புன்னகை ஒன்றை உதிர்த்த படி, "இல்லை... அந்த மரப் பட்டைகளிலை இறந்த பிள்ளைகளின்ரை சிதறிப் பறந்த தசைத் துண்டுகள் ஒட்டிக்காய்ந்து கருவாடாகப் போய் இருக்குது... அவற்றைத்தான் அதுகள் கொத்தி..."

அவர் இதைக் கூறியதும் எங்களுக்கு மேலும் இடிவிழுந்தது போல் ஆகிவிட்டது. எவருமே எதுவும் பேசவில்லை... எல்லோருமே சிறிது நேரம் மௌனமாக நின்றனர்...

ஆத்தி மரத்தின் கீழும் இதே மாதிரி, இறந்த பிள்ளைகளின் துண்டு பட்ட கை,கால் பகுதிகளையும், தசைத் துண்டுகளையும், மாணவர் களின் இரத்தம் தோய்ந்த இலவசப் புத்தகங்களையும் ஒன்றாகப் போட்டுத் தீ வைத்தக் கொழுத்திய இடத்தை உருத்திரமூர்த்தி காட்டினார்... அங்கே வெள்ளையும் கரியும் கலந்த சாம்பல் மேடு என் கண்களை குளமாக்கியது!

"ஓ...சந்திரிகாவின் இலவச சீருடையும், இலவச புத்தகமும் இரத்தம் தோய்ந்த நிலையில் கொளுத்தப்பட்டு விட்டன..."

எனது மனம் ஆத்திரத்தினால் கொதித்துக் கொண்டிருந்தது!

இந்தத் தீ என்றாவது ஒரு நாள் தென்னிலங்கையிலும் பரவும்... அந்த ஆண்டவனின் நியதிக்கு சிங்கள தேசமும் ஒரு நாள் சாம்பலாகும்...

அங்கிருந்து நானும், மற்றவர்களும் உருத்திரமூர்த்தியின் வீடு நோக்கிச் சென்றுகொண்டிருந்தோம்... எங்களுடன் உருத்திரமூர்த்தியின் எட்டு வயது மகளும் கூடவே வந்து கொண்டிருந்தாள்...

"உர்... உர்... உர்..."

அப்பொழுது வானத்தில் பேரிரைச்சலுடன் புக்காரா சுற்றிவட்டமிட்ட படி பறந்து கொண்டிருந்தது... நான் அண்ணாந்து பார்த்தபடியே

நின்றேன்... தொடர்ந்தும் அந்த விமானம் வட்டமிட்டுக் கொண்டே இருந்தது... சுற்றுமுற்றும் பார்த்தேன்... அந்தப் பிரதேசம் எங்குமே... மயானம் போல் காட்சியளித்தது... அங்கே நின்ற ஒருவரையும் காண வில்லை.

நான் என்னுடன் வந்தவனும் உருத்திரமூர்த்தி அவருடைய எட்டு வயது மகள், இவர்களைத் தவிர எல்லோருமே அந்த இடத்தைவிட்டு ஓடிப்போய் பதுங்கத்தொடங்கிவிட்டனர்.

"ஓ... அந்தக் குண்டு வீச்சின் கொடூரத்தின் சுவடுகள் அந்த மனங் களில் ஆளமாகப் பதிந்துவிட்டது..."

வட்டமிட்டபடி நின்ற புக்காரா குடாரப்புப் பகுதியில் ஆறுகுண்டு களைச் சகட்டு மேனிக்கு பொழிந்து தள்ளிவிட்டு ஓடி மறைந்துவிட்டது.

உருத்திரமூர்த்தியின் மகள் அந்த விமானத்தையே வெறித்துப் பார்த்தபடி நின்றாள்.

"என்னட்டை பெரிய துவக்குத் தந்தால்... அந்தக் கொலைகாரனைச் சுட்டுத்தள்ளிவிடுவன்..."

ஆம்... அந்தப் பிஞ்சுக்குழந்தையின் உதடுகள் முணுமுணுத்தன... நாங்கள் அந்தக் குழந்தையையும் அழைத்துக் கொண்டே அந்தச் சுடு மணலினூடாகவே நடந்துகொண்டிருந்தோம்.

சூரியன் உச்சியையும் தாண்டி மேற்கே சரிந்துகொண்டிருந்தது... வெயில் தகதகத்துக்கொண்டிருந்தது... நிலத்தின் சூடு ஒருபுறம், சூடான காற்று ஒருபுறமுமாக எங்களை வாட்டியது...

"இந்தப் பகுதியிலே எந்த வீட்டுக்குப் போனாலும் அங்கை ஏதாவ தொரு துயரமான சம்பவம் நடந்திருக்குது... ஒன்றில் வீட்டிலுள்ள பிள்ளை செத்திருக்கும் அல்லாதுவிட்டால் காயப்பட்டாவது இருக்கும்..." எங்களுடன் நடந்துவந்துகொண்டிருந்த உருத்திரமூர்த்தியின் குரல் கனத்துக்கொண்டிருந்தது.

"அங்கை பாருங்கோ... தம்பாப்பிள்ளை அண்ணை வீட்டை"

அவர்காட்டிய சிறிய ஒழுங்கையின் ஊடாகப் பார்த்தோம்.

வாசலில் தாடி வளர்த்த ஒரு இளம் குடும்பஸ்தர் சோகமே உருவாக இருந்து எங்களைப் பார்த்துக்கொண்டிருந்தார்... மெதுவாகத் தயங்கித் தயங்கி, அவருடைய வீட்டினுள் காலடி எடுத்து வைக்கின்றோம்... விசும்பல் ஒலிகள்... மட்டுமே கேட்டுக்கொண்டிருந்தது....

அந்த வீடு மயான அமைதியில் மூழ்கிப் போயிருந்தது. வாசல் கொட்டிலின் கீழ் இரண்டு வயோதிபத் தம்பதிகள் வானத்தை வெறித்துப் பார்த்தபடி இருந்த கோலம் எங்களுக்கே மனச் சுமையை ஏற்றிவிட்டது.

"அண்ணை! நாகர் கோயில் பிள்ளைகளுக்கு நடந்த சம்பவத்தைப் பற்றி அறிந்து போக வந்திருக்கினம்... நீங்களும்..."

உருத்திரமூர்த்தி எங்களை அறிமுகம்செய்து வைக்கும்போது கூடச் சிறிது தயங்கியபடியே கூறிக்கொண்டிருந்தார்....

திருமலையைச் சேர்ந்த தம்பிராசா தம்பாப்பிள்ளை 42 வயதுடைய ஒரு தொழிலாளி... 13 வருடங்களாக இந்த மண்ணுடனேயே தன்னைப் பிணைத்துக்கொண்டு வாழ்ந்து வருகிறார்... அவருக்குள்ள 5 பிள்ளை களில் இளையமகள் 1990ஆம் ஆண்டு சுகயீனமாக இருந்து இறந்து விட்டாள்....

"ஐயோ!... அண்டைக்குக் காலமை வெள்ளிக்கிழமை... கொஞ்சம் பிந்திப் போச்சுதெண்டு என்ரை மூத்த மகள் சாந்தி தம்பிக்காரன் கோபிதரனையும் கூட்டிக்கொண்டு பள்ளிக்கூடத்திற்கு ஓடிப்போனது... இப்பிடி என்ரை பிள்ளைக்கு சாவு வருமெண்டு நான் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை... என்ரை மகன் கோபிதரன் புளியமரத்தடியில குண்டு பட்டு வயிறு பிழந்த நிலையில் செத்துப்போச்சுது என்று கேள்விப் பட்டதும் நான் ஓடிப்போனன். அங்க சந்திக்குகிட்டை என்ரை பிள்ளையும் என்னும் இரண்டு மாணவர்களும் உடல் சிதறி உருக்குலைந்து இரத்த வெள்ளத்தில் கிடந்தனர். என்ரை பிள்ளையை மாமா மடியில் தூக்கி வைத்தபடி கதறி அழுதுகொண்டிருந்ததைக் கண்டதும், என்னால தாங்க முடியவில்லை... ஐயோ என்ரை பிள்ளை நல்லாப் படிக்கிறான்... படித்து என்ரை குடும்பத்தைப் பார்ப்பான்... என்று நினைத்திருக்க பள்ளிக்குப் போன பிள்ளை குண்டுபட்டுச் சாகுமெண்டு நினைத்தனோ..."

அவர், தலையைப் பிய்த்துக் கொண்டு ஏக்கத்தில் அங்கலாய்த்துக் கொண்டிருந்தார்... அவருடைய மனைவி சிறிது தள்ளி நின்று விக்கி விக்கி அழுதுகொண்டிருந்தார்... அந்தப் படுகொலை நடந்து இரண்டு நாட்களின் பின், திருகோணமலையில் இருந்து அவரது உறவினர் நவரட்னம், கோபிதரனுக்கு என்று உடுப்புக்கள் வாங்கிவந்திருந்தார்... அவருக்கு அந்த வீட்டில் நடந்த சம்பவமே தெரியாது.. வீட்டுவாசலில் வந்தபடியே "கோபி... கோபி...", என்று செல்லமாக குரல் வைத்தபடி உள்ளே நுழையவும்,

"ஐயோ! என்ர செல்வமே..." என்ற ஓலம் வானைப்பிழந்தது.

அங்கே எழுந்த ஒப்பாரியினால் திகைப்படைந்த நவரட்னம், ஒன்றுமே தெரியாத நிலையில் தம்பாப்பிள்ளையைத்தான் பார்த்தார்....

"ஐயோ!... அண்ணை... எங்கட பிள்ளை எங்கள விட்டுட்டு போயி ட்டுது... என்று கூறி அழத்தொடங்கியதும் மீண்டும் அந்தக் குடிசையில் சோகம் கவியத் தொடங்கிவிட்டது!"

அந்தச் சம்பவத்தை அப்படியே விபரித்துக்கொண்டிருந்த உருத்திர மூர்த்தியின் கண்களிலும் கண்ணீர் கசிந்துகொண்டிருந்தது... எங்களின் முன்னால் சோகமே உருவாக நின்ற அவரது மகள் சாந்தியைப் பார்த் தேன்... அந்தப் பிள்ளையின் முகத்தில் உயிரோட்டம் இல்லை...

நாகர் கோயில் மகாவித்தியாலயத்தின் பதினோராம் ஆண்டு படிக் கின்றார்....

"அண்டைக்குக் காலமை என்ரை தப்பியோடை நான் ஸ்கூலுக்குப் போனனான்... இடைவேளை முடிந்ததும் அடுத்த வகுப்புத் தொடங்கிச் சில நிமிடத்திலை பொம்மர் சுத்தத் தொடங்கிட்டுது... முதல் குண்டுச் சத்தம் கேட்டதும் சேர் ஆட்கள் எங்களைப் படுங்கோ என்று கத்திக் கொண்டிருந்தனர்...அவையள் சொன்னதும் பள்ளிக்கூடத்திற்குப் பின்னா லை உள்ள கொட்டிலில் போய் முகம் குப்புறப்படுத்து விட்டம்... என்னு டைய தம்பி கோபியின்ரை வகுப்புப் பிள்ளைகள் முன் வாசலால ஓடிப் போனவையளாம்... நாங்கள் படுத்த கொஞ்சத்திலை பள்ளிக்கூடத்துக்கு பக்கத்திலை பெரிய சத்தத்துடன் குண்டு விழுந்ததும், ஒரே புகை மண்டலமாக இருந்தது... ஏதோ ஒரு விதமான வெடி மணம் முக்கை அரித்துக் கொண்டிருந்தது. அந்த நேரம் "ஐயோ" என்ற கூக்குரல்கள் காதைப் பிளந்து கொண்டிருந்தது... அதற்கு மேலும் அங்கை நிற்கப் பயமாக இருந்தது. அங்கிருந்து காட்டுப்பக்கமாகப் போய் வீட்டை நோக்கி ஓடிக்கொண்டிருக்க, அம்மாவும், அப்பாவும் மணற்பிட்டியினூ டாக ஓடி வந்தனர்... "தம்பி எங்கை?" என்று அப்பா கேட்டபிறகு தான் தம்பி வந்து சேரவில்லை என்று எனக்குத் தெரிந்தது. அதற்குப் பிறகு என்னையும், மற்றத்தம்பியாட்களையும் என்னோடை விட்டுட்டு அம்மாவும் அப்பாவும் புளியடியை நோக்கி ஓடிப்போனவையள்..." சாந்தி இதைச் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே இடையிடையே விம்மி விம்மி அழுது கொண்டிருந்தாள்... அந்தச் சம்பவம் நடந்து மூன்று வாரங்களுக்கு மேலாகியும் இன்னும் பள்ளிக்கூடத்திற்கு மாணவர் களைப்பெற்றோர்கள் அனுப்பவில்லை. மீண்டும் சிறீலங்கா அரசுகுண்டு களையும் எறிகளைகளையும் வீசித் தங்களுடைய குழந்தைகளையும் கொன்று அழித்து விடுமோ என்ற பயம் அவர்களை விட்டு விலக வில்லை...

"பள்ளிக்கூடத்துக்குப் போறதை நினைக்கப் பயமாத்தான் கிடக்கு... இப்பிடி மிலேச்சத்தனமாக சிங்கள அரசாங்கம் எங்கடை பள்ளிக் கூடத்துக்கே குண்டு போடுறாங்கள்... ஆனாலும் அதற்காக நாங்கள் படிக்காமல் இருக்கேலாது தானே..."

கண்ணீரின் மத்தியில் அந்த மாணவி சாந்தி, கூறியதும் எங்களுக்கும் பெருமையாகத்தான் இருந்தது....

ஆம்...அரசின் அடக்கு முறைகளுக்கு முகம் கொடுக்கின்ற உறுதியும் தன்னம்பிக்கையும் எங்களுடைய குழந்தைகளின் உள்ளத்தில் ஊற்றெ டுக்க வேண்டும்....

அப்பொழுதுதான் எதேச்சாதிகாரிகளினதும்,ஆக்கிரமிப்பாளர்களினதும் அடக்கு முறைகளும், இன அழிப்பு நடவடிக்கைகளும் பொடிப் பொடி யாகும்...

அங்கிருந்து சில யார் தூரத்தில் வசிக்கும் மயில்வாகனம் கலை வாணி என்ற 15 வயது மாணவி பத்தாம் ஆண்டு படித்துக்கொண்டிரு க்கிறார்....

"ஐயோ... கடவுளே... எங்களுக்கு பள்ளிக்கூடம் போகப் பயமாக் கிடக்கு... அண்டைக்கு நானும் தங்கச்சியும் குண்டு போடேக்கை பட்ட கஷ்டத்தை நினைத்தால் இன்றும் வயிற்றைக் கலக்கிக் கொண்டு வருகுது... பள்ளிக்கூடம் என்று தெரிந்துதான் குண்டு போட்டிருக்க வேணும்... பிறகும் அவங்கள் எங்களுக்குப் போடமாட்டாங்கள் என்று நம்ப ஏலாது தானே?..."

நான் பள்ளிக்கூடம் போகலாம் தானே என்று கேட்டதற்கு கலை வாணி கூறிய பதில் கூட நியாயமாகவே எனக்குப்பட்டது. ஏந்த நாட்டிலுமே இல்லாத அளவுக்கு ஆலயங்கள் மீதும், வயோதிபர் இல்லங்கள் மீதும், பாடசாலைகள் மீதும் குண்டுகளை வீசி மக்களைக் கொன்று அழிக்கும் இந்த அரசை நம்பி, எப்படி ஒரு உத்தரவாதத்தை எங்களால் கொடுக்கமுடியும்?

1994-ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் கா.பொ.த. சாதரண தரப் பரீட்சை நடந்துகொண்டிருந்த வேளையில் முல்லைத்தீவில் உள்ள பாடசாலையின் மீது எறிகணைகள் வீசப்பட்டபொழுது பல மாணவர்கள் படுகாயமடைந்த அந்தத் துயர சம்பவங்களைக் கூட நினைத்துப் பார்க்க முடியுமா?

"நாங்கள் ஒருக்கால் பெரிய சம்மாட்டியார் வீட்டை போயிற்று வருவம்... அவற்றை குடும்பத்திலை நாலு பிள்ளைகள் செத்திருக்கு..."

எங்களுடன் இடையில் வந்து சேர்ந்த மாஸ்ரர் ஒருவர் கூறியதும், அவரைத் தொடர்ந்து, கடற்கரை றோட் வழியாகச் சென்றோம்...

நாகர் கோயில் மகாவித்தியாலயத்தில் இருந்து 150 யார் தூரத்தில் அவரது வீடு இருக்கிறது... அந்தப் பிரதேசத்தில் மிகப் பெரிய செல்வாக் குடன் "பெரிய சம்மட்டியார்" என்று எல்லோராலும் செல்லமாக அழைக்க

ப்படும் 48 வயதுடைய ஆறுமுகம் அழகராசாவின் வீட்டுக்குள் காலடி வைக்கின்றோம்...வாசலில் மல்லாக்கப் படுத்திருந்து முகட்டைப் பார்த்த படி இருந்தார்....

அவருடைய வீட்டின் கூரைகள், யன்னல்கள் குண்டுச் சிதறல்களால் உடைந்து நொருங்கிப் போயிருந்தன... எங்களைக் கண்டதும் படுக்கையில் இருந்து எழுந்து புன்முறுவலுடன் வரவேற்றார்....

"சே!... என்ரை குடும்பத்துக்குள்ளை இப்படி ஒரு நேரத்தில் கூடிய இழப்பு வருமென்று நினைக்கவில்லை... அண்டைக்கு காலை 6 மணிக்கு பொம்மர் சுத்தினது... முதல் நாளும் குடாரப்பு பகுதியிலை மூர்க்கத் தனமாக 20, 25 குண்டுகளைப் போட்டவங்கள்... அப்பவும் பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு, "இண்டைக்குச் சிலவேளை குண்டுகள் போடுவான், கவனம்" என்று சொன்னனான்... விதி ஆரைத்தான் பாருங்கோ விட்டு வைத்தது... மத்தியானம் புக்காரா சுத்தேக்கை கடற்கரையில் இருந்து பார்த்துக் கொண்டிருந்தனாங்கள்... முதல் குண்டு ஏழு புளியடிப்பக்கம் விழ நாங்கள் எழும்பி ஓடி வந்த கொஞ்ச நேரத்திலை இரண்டாவது குண்டு பள்ளிக்கூடப் பக்கம் போட்டாங்கள்... நாங்கள் அலறித் துடித்துக் கொண்டு ஓடிவர... கடவுளே... அந்தக் காட்சியை எப்பிடித்தான் வாய-ாலை சொல்லுறது?..."

சில வினாடிகள் அந்த வீட்டில் எவருமே பேசாது அமைதியாக இருந்தனர்...அந்தச் சோகமான,கொடூரமான சம்பவத்தை இன்னுமொரு முறை அசைபோட்டுப் பார்க்க அவரால் முடியவில்லை...

சிறிது நேர அமைதியைக் குலைத்துக் கொண்டு அவரே கூறத் தொடங்கினார்....

"என்ரை குடும்பத்துக்குள்ளை மட்டும் நாலு பிள்ளைகள் உடல் சிதறிக் கொல்லப்பட்டிருக்குதுகள்... என்னுடைய ஒரு தம்பி சுந்தரலிங் கத்தின் 16 வயது பழனி, 6 வயது தர்சினி என்ற இரண்டு பிள்ளைகளும் மற்றத் தம்பி மயில்வாகனத்தின் மகன் கணநாதன் காலிலை காயப் பட்டுப் பிறகு செத்தது... மற்றொரு தம்பி நவரத்தினசாமியின் மகள் உமாதேவியும் உடல் சிதறிப் பலியாகினார்கள்... நாங்கள் ஓடிச்சென்று மரத்தின் கீழ் பார்த்த பொழுது, எல்லாமே இரத்தச் சிதிலமாகி இருந்தது... என்னுடைய 11 வயது மகன் முருகவேல் பாடசாலையில் இருந்து ஓடிவர வேப்பமரத்தின் கீழ் ஷெல் துண்டு பட்டு இரண்டு தோள் பட்டைகளிலும் காயப்பட்டு இப்போ வைத்தியசாலையில் அனுமதிக்கப் பட்டிருக்கிறார்... சே!... இப்படி ஒரு கொடூரமான கொலையை என்ரை வாழ்நாளில் எப்பவுமே காணவில்லை... எங்கடை நாகர் கோயில்

பகுதியிலை இப்படி ஒரு சம்பவம் இதுவரை நடக்கக்கூட இல்லையே..."

அவர் வேதனையும், ஆத்திரமும் கலந்த நிலையில் பேசிக்கொண்டிருந்தார்...

அவருடைய வீட்டில் இருந்து வெளியேறி நாகர் கோயில் மகா வித்தியாலயத்தை நோக்கிச் சென்ற பொழுது, அங்கே பள்ளிக்கூடம் வெறிச்சோடிப் போய் இருந்தது... பள்ளிக்கூடத்தின் முகப்பு வாசலினூடக உள்ளே சென்றதும், ஒரு வாங்கில் பதினைந்து இருபது புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன... அவற்றையே பார்த்துக் கொண்டு நின்ற என்னை நோக்கி வந்த அதிபர்,

"இஞ்சைபாருங்கோ... அண்டைக்குக் காலையிலை படிக்க என்று ஆசையோடு வந்த பிள்ளைகளின்ரை புத்தகப் பைகள் தான் இவை... ஐயோ! என்ரை கண்ணுக்கு முன்னாலேயே இந்தப் பிள்ளைகள் செத்துப் போனதுக்குப் பிறகும் நான் உயிரோடை இருக்கிறனே..."

அவர் தலையில் அடித்துக்கொண்டு அழத் தொடங்கிவிட்டார். அவரை ஒருமாதிரி சமாளித்து ஆறுதல்படுத்திக் கொண்டே, அவருடைய அனுமதியுடன் ஆசிரியர்களுடன் போய்க் கதைத்தேன்...

"ஏன் ரீச்சர்!... இன்னும் பிள்ளைகள் வரத்தொடங்கேல்லையோ?..."

நான் அந்தச் சூழலை மாற்றுவதற்காகக் கேட்டு வைத்தேன்...

"சே!... இன்னும் அதுகள் வரத் தொடங்கவில்லை... நேற்றுத்தான் கல்விப்பணிப்பாளர் கந்தசாமி சேர், மற்றும் அதிகாரிகள் எல்லோரும் வந்து பெற்றோருடனும், எங்களோடையும் பாடசாலையை ஆரம்பிப்பது பற்றிக்கதைத்தவர்கள்... ஒவ்வொரு நாளும் 10 மணிக்கும் 2 மணிக்கும் இடையிலே புக்காரா வந்து சுத்துறதும் குண்டு போடுறதுமா இருந்தால் எப்பிடிப் பிள்ளைகள் வருவாங்களோ தெரியவில்லை... ஸ்கூல் நடக்காமல் இருக்க எங்களுக்கே ஒரு மாதிரியாத்தான் இருக்குது..."

அங்கே நின்ற செல்வி அன்னலட்சுமி கந்தசாமி, சொல்லி வருத்தப் பட்டுக்கொண்டிருந்தார்...

அவர் நாகர்கோயிலையே சொந்த ஊராகக் கொண்டவர்... அந்தச் சம்பவம் அவரை மட்டுமல்ல அங்கே நின்ற எல்லா ஆசிரியர்களையுமே பாதித்திருந்தது என்பதை அவர்களது வெருட்சியடைந்த முகங்கள் காட்டிக் கொண்டிருந்தன....

"சே!... இப்பிடி இந்த அரசு பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கே குண்டு போடும் என்று நாங்கள் யாருமே நினைத்திருக்கவில்லை... எல்லாம் முடிந்து போய்ப் பார்க்க அங்கும் இங்குமாக எங்கடை பிள்ளைகளின்ரை கைகளையும் கால்களையும் செத்த உடல்களையும் பார்க்க,

தலை இப்பவும் விறைத்துக் கொண்டிருக்குது... ஆண்டு இரண்டில் படிக்கின்ற சுந்தரலிங்கம் தர்சினி என்ற ஏழு வயதுப் பிள்ளை வடலி மரத்திற்குக் கீழ் நித்திரை கொள்வது போல் இறந்து கிடந்தது... அதின்ரை சட்டை எல்லாம் ஒரே இரத்தக்கறை... றோட்டில் தாய் தன்ரை மடியிலை மார்க்கண்டு நாகலோசினி என்ற பிள்ளையை வைத்துக்கொண்டு கதறி அழுதுகொண்டிருந்தா... அதின்ரை குடல் வெளியே தொங்கிக் கொண்டிருந்தது..."

அந்த ஆசிரியை வாயைப் பொத்திய படி விக்கி விக்கி அழத் தொடங்கிவிட்டார். "காலையிலை சாரதா ரீச்சரிட்டை என்ன வடிவா வந்து, அந்தப் பிள்ளை பரிசு வாங்கிக்கொண்டு போனது... சே!... அதை வீட்டை கொண்டுபோய் ஆசையோட பெற்றோருக்குக் காட்ட முடியாமலேயே அதின்ரை உயிர் போய்விட்டது..."

அன்னலட்சுமி ரீச்சருக்கு அருகில் இருந்து எங்களையே பார்த்துக் கொண்டிருந்த ஜெயதேவி ரீச்சர் கண்ணீரின் மத்தியில் கூறினார்....

காலையில் கோட்டமட்ட விளையாட்டுப்போட்டியில் முதலிடம் பெற்ற மாணவர்களுக்கு அன்று காலை பரிசளிப்பு நடந்ததும், அப்பொழுது தான் தெரியவந்தது....

"அந்தப் பிள்ளை மட்டுமில்லை, எட்டாம் ஆண்டு ஸ்ரீவித்தியா, பத்தாம் ஆண்டு படித்த இ. உமாகாந்தன், எல்லோருமே காலையில் என்ன வடிவா வந்து சிரித்த முகத்தோடை ரீச்சர் ஆக்களிட்டை பரிசு வாங்கிக் கொண்டு போச்சுதுகள்... சே!... இண்டைக்கு அதுகளின்ரை பேச்சும் மூச்சுமே இல்லை..."

அங்கே நின்ற ஆசிரியர்களின் ஆதங்கமும், மன உழைச்சலும் நெஞ்சையே பிழிவது போல் இருந்தது...

அன்று நற்சிந்தைனையின் பொழுதும்கூட, "மகான்கள் வாழ்ந்து சென்ற பாதையை நாமும் தொடரவேண்டும்..." என்று அழகு தமிழில் பேசி எல்லோரையும் கவர்ந்த பன்னிரண்டு வயது மாணவியான உமாதேவி கூட உடல் சிதறி உருக்குலைந்து பலியாகிய அந்தச் சோகத்தை ஒரு ஆசிரியர் கூறியதும், எங்கள் ஒவ்வொருவருடைய இதயமும் குருதிக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தது...

ஓ...அறிவுச் சுடர் பரப்பும் அந்தக் கல்விக்கூடம் இன்று களை இழந்து காணப்படுகிறது.. அங்கே கலகலக்கும் குழந்தைகள் இல்லை... அவர்கள் விட்டுச் சென்ற பைகள் மட்டும் அந்தச் சோகத்தை மீட்டிக் கொண்டிருந்தன....

அங்கே இருந்த ஆசிரியர்கள் முகத்திலே கவலையின் ரேகைகள்

நெளிந்து கொண்டிருந்தன. யாருடன் என்ன பேசுவது என்றே தெரியாத நிலையில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மூலையில் இருந்து வெறித்துப் பார்த்தபடி இருந்தனர்...

அதிபரோ, எவரோடும் பேசக்கூடிய நிலையில் இருக்கவில்லை....

"குணபாலசிங்கம் அண்ணை வாறார்... இவர் ஒரு புகைப்படக் காரர்... அண்டைக்கு நின்று எல்லா வேலைகளையும் செய்து காயப்பட்ட ஆட்களோடை மந்திகைக்கும் போனவர்..."

எங்களுடன் இருந்த உருத்திரமூர்த்தி, சைக்கிளில் வந்து இறங்கிய வரை அறிமுகம் செய்ததைத் தொடர்ந்து அங்கு நிலவிய இக்கட்டான நிலையில் இருந்தும் விடுபட்டோம்...

"நீங்கள் போட்டோக்கிராபர் என்றால் அண்டைக்கும் ஏதும் படங்கள் எடுத்தனீங்களோ?"

அவர் சைக்கிளை விட்டு, பாடசாலையின் வாசல்படியில் ஏறும் பொழுதே இந்தக் கேள்வியைக் கேட்டதும் அவரது முகம் ஒரு மாதிரி மாறியதை அவதானித்தேன்...

"ஐயா!... அண்டைக்கு நாங்கள் நின்ற நிலையிலை நான் இதைப் பற்றிச் சிந்திக்கவே முடியேல்லை... என்னங்க... எங்கடை மண்ணிலை ஓடி ஆடித்திரிந்த பச்சைக்குழந்தைகள் பதைபதைக்க எங்கடை கண்ணுக்கு முன்னாலை கையிழந்து, காலிழந்து உடல்சிதறிச் செத்துப் போய் இருந்த அந்தக் காட்சியை இப்ப நினைத்தாலே கை, கால் நடுங்குது..."

அவர் சொல்லிக் கொண்டே குண்டு விழுந்த பகுதியைத் திரும்பிப் பார்த்து பெருவீந்து விட்டார்.

மயிலிட்டியில் இருந்து இடம்பெயர்ந்து வந்த அருணாசலம் குணபால சிங்கம் ஐம்பது வயதாகியும் சுறுசுறுப்பும் துடிப்புமுள்ளவராகக் காணப் பட்டார்.

"குண்டுவீச்சு முடிந்து புக்காரா போனதைத் தொடர்ந்து எல்லோரும் சேர்ந்து காயப்பட்டவர்களையும், இறந்தவர்களையும் குற்றுயிராகக் கிடந்தவர்களையும் வாகனங்களிலும் அம்புலன்ஸ்களிலும் ஏற்றி அனுப் பிக் கொண்டிருந்தோம். கடைசியாகப் போன வானில் நானும், கூடவே மந்திகைக்குப் போனேன்... மந்திகைக்குப் போய்ச் சேருவதற்கு முன்னரே சில பிளளைகளின்ரை உயிர் பிரிந்துவிட்டது... ஆனால், ஐயா!... மந்திகையிலை எங்கடை டாக்டர்மார், நேர்ஸ்மார் நல்ல சேவை செய்து கொண்டிருக்கலாம்...அதுவும் பிரான்ஸ் வைத்தியர்களும், நேர்ஸ் மாரும் செய்த உதவிகளை எங்களாலை எண்டைக்கும் மறக்கமுடியாது..."

ஆம்...எம்.எஸ்.எப். (M.S.F), எனப்படும் மெடிசின்ஸ் சான்ஸ் புறொன்ரியர்ஸ் வைத்திய உதவி நிறுவனத்தைச் சேர்ந்த டாக்டர் மற்றும் அவரது உதவியாளர்கள் ஆற்றுகின்ற பணியோ அளப்பரியது....

சிறீலங்காவின் ஜனாதிபதியினால் செய்தித் தணிக்கை பிரகடனம் செய்யப்பட்ட மறுநாளே நாகர்கோயில் மகாவித்தியாலயப் படுகொலை, அரச படைகளினால் கண்மூடித்தனமாக மேற்கொள்ளப்பட்டது.

ஆம்!... இந்தப் படுகொலைகளும் இனிமேலும் செய்ய இருக்கும் படுகொலைகளும், வெளி உலகுக்கு தெரியாது மறைப்பதற்காக அரசு முயற்சித்த போதும், நாகர் கோயில் படுகொலைகளும் அதன் கொடூரங் களும் வெளி உலகுக்குத் தெரியவந்த போது அதிர்ச்சியடைந்த அரசு,

"நாகர் கோயிலில் பாடசாலைச் சிறுவர்கள் மீது குண்டுகள் போடப்படவில்லை. ஆனால் புலிகள் பத்து, பதினைந்து வயதுச் சிறுவர் களையும் வைத்திருக்கிறார்கள்..." என்று பூசி மழுப்பியது, அந்த வகை யில் இங்கே நடைபெற்ற மாணவர் படுகொலைகளை உலகுக்கு அம்பலப்படுத்தி பிரான்ஸ் வைத்திய குழுவினர் மனிதகுல சேவையி லான மனிதாபிமானம் மறக்கக்கூடியதா?

அவர்களுடைய ஆதாரமான அறிக்கைளை வைத்து வியப்பும், ஆத்திரமும் அடைந்த ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தின் "யூனிசெப்" நிறுவனத்தின் பணிப்பாளர் நாயகம்,

"யாழ்ப்பாணத்திலுள்ள பாடசாலையொன்றின் மீது, நடத்தப் பட்ட விமானக் குண்டுவீச்சுத் தாக்குதலில் அப்பாவிச் சிறுவர்கள் கொல்லப்பட்டுள்ளமையை வன்மையாகக் கண்டிக்கிறேன். ஒரே நாட்டி லுள்ள உள்நாட்டு அரசியல் நிலை எவ்வாறாக இருந்தாலும், நாட்டின் முக்கிய வளங்களாகக் கருதப்படும் கல்வி நிறுவனங்கள் மீது நடாத்தப் படும் தாக்குதல்கள் எதன் மூலமும் நியாயப்படுத்தப்பட முடியாதவை"

என்ற சாதாரண வரைமுறைகளில் இருந்தும் குறிப்பிட்டதானது வெறுமனே அறிக்கை என்று மட்டும் நிராகரித்துவிட முடியுமா?

ஆம்!... அந்தக் கொடூரத்தை அறிந்து, தமது உள்ளக் கொதிப்பை வெளியிட்டபோது, வெட்கித் தலைகுனிய வேண்டிய ஜனாதிபதி, அந்த அறிக்கைக்கு எதிராகக் கண்டனத்தை அல்லவா தெரிவித்திருந்தார்...

வான்களிலும், அம்புலன்ஸ்களிலும் இருந்து இறக்கப்பட்ட மாணவர் களின் சடலங்களும், காயப்பட்டவர்களும் இட நெருக்கடியினால் வாட்டுக்குக் கொண்டு போக முடியாத நிலையில், வைத்தியசாலை வாட்டுகளிலும் சத்திர சிகிச்சை நிலைய விறாந்தையிலும் வரிசையாக அடுக்கப்பட்டிருந்தனர்...

வாகனங்களின் இருக்கைகள் மட்டுமல்ல, வைத்தியசாலையின் விறாந்தைகள் நடைபாதைகள் எங்கும் இரத்த வெள்ளமாக இருந்ததாக குணபாலசிங்கம் கூறிக் கொண்டிருந்தார்.

நாகர் கோயில் மகாவித்தியாலயத்தின் மாணவப் படுகொலைகளின் குருதிச் சுவடுகள் அந்தப் பிரதேசத்தில் இருந்து இன்னும் கூட மாறாத நிலையில் அங்கே வாழும் மக்களின் மனங்களும் உடலும் கூட செயலி ழந்தது போல் இருப்பதைத்தான் என்னால் உணர முடிந்தது.

ஆம்... ஒரு கிராமத்தின் எதிர்கால சந்ததியையே முற்றாக அழித்து விட்ட சிறீலங்கா பேரினவாத அரசு, தனது இனவாதக் கோட்பாட்டை மீண்டும் உலகுக்கு வெளிக்காட்டியுள்ளது....

துயரத்தின் வேதனையைச் சுமந்து கொண்டு அவர்களிடம் இருந்து விடைபெற்றுச் சென்று கொண்டிருந்த எங்களுடைய இதயத்தை ஏதோ ஒரு சுமை அமுத்திக் கொண்டிருப்பது போல் இருந்தது.

அங்கிருந்து துவிச்சக்கர வண்டிகளில் புறப்பட்டு பருத்தித்துறை ஆதார வைத்தியசாலையை அடையும் வரை நாங்கள் ஒருவரோடு ஒருவர் எதையுமே பேசிக் கொள்ளவில்லை.

வைத்தியசாலையினுள் சென்று வாட்டில் அனுமதிக்கப்பட்டிருந்த நாகர் கோயில் குழந்தைகளைப் பார்க்க வேண்டுமென்ற உணர்வில், வைத்திய அதிகாரியிடம் அனுமதியைப் பெற்றுவிட்டு அந்த வாட்டினுள் சென்றோம்...

அங்கே ஒரு கட்டிலில் ஒரு பெண் குழந்தையைச் சுற்றி சில பெண் களும், தாதிகளும் நின்றனர்... மெதுவாக, அந்தக் கட்டிலின் அருகே சென்று பார்த்தேன்...

அங்கே!... என் கண்களால் பார்க்க முடியாத அளவு கோரமான காட்சி யைக் கண்டதும் என்னுடைய தலை சுற்றிக் கொண்டு வந்தது...

ஆம்!... பாடசாலையில் போடப்பட்ட குண்டுவீச்சினால் தனது இரு கால்களையும் இழந்த நிலையில் 11 வயதுடைய ரஞ்சித்குமார் ரஜிதா என்ற 6-ம் ஆண்டு படிக்கும் மாணவி கட்டிலின் தலைப் பகுதியுடன் சாய்ந்து இருந்து ஏதோ பாடுவது போல் இருந்தது... நான் மிக அருகில் சென்று அந்தச் சிறுமியைப் பார்த்தேன்.

"இந்த நிலை வந்து சேருமோ?... எமக்கு எப்ப வந்து சாவு கூடுமோ...?"

ஆம்... அந்தப் பாடல் அடிகளை இராகத்துடன் பாடிக்கொண்டிருந்த அந்தக் கள்ளங்கபடமற்ற குழந்தையின் முகத்தை என்னால் கண் கொண்டு பார்க்க முடியவில்லை...

அந்தப் பாடலைக் கேட்கும் பொழுதே அங்கே நின்ற அந்தச் சிறுமியின் தாய், சுற்றி நின்ற தாதிகள் எல்லோருமே கண்ணீர் மல்கத் தேம்பித் தேம்பி அழத் தொடங்கிவிட்டனர்... அந்த வினாடியில் அந்த "வாட்" எங்குமே ஒரே சோக மயமாகியது...

"அம்மா... ஏனம்மா? நீங்கள் எல்லாம் ஏன் அழறீங்கள்... நான் அழேல்லையே"

அந்தச் சிறுமியின் அந்த வார்த்தைகள்

மேலும் வெந்த புண்ணில் வேல் பாய்ச்சியது போல் இருந்தது...

"அக்கா!... நான் ஸ்கூலில் இருக்கேக்கை முதல் வெடி கேட்டதும், ஆத்திமரத்தை நோக்கி ஓடினேன்... அடுத்த வெடி கேட்டதும், என்னை அறியாமலேயே கீழே விழுந்துவிட்டேன்... அப்போ காயப்பட்டதை நான் உணரவில்லை... குனிந்து பார்த்தபொழுது எனது இரு கால்களையும் காணவில்லை... முழங்காலுக்குக் கீழ் இரண்டு பக்கத்தில் இருந்தும் இரத்தம் சீறிப் சீறிப் பாய்ந்து கொண்டிருந்தது..."

அந்தச் சிறுமியின் ஒவ்வொரு செயலும் அங்கே நின்ற ஒவ்வொரு வரையும் ஈட்டியால் குத்துவது போல் இருந்தது...

"நீ வாயை மூடிக் கொண்டிருபிள்ளை நான் போயிற்று வாறன்..."

அந்தச் சிறுமியின் தாயினால் அந்தக் கொடூரத்தைச் சகிக்க முடிய வில்லையோ என்னவோ அந்த இடத்தைவிட்டுப் போக முயற்சித்தார்...

"ஆ... அம்மா... எனக்கு வெளிநாட்டில் இருந்து மாமா வெள்ளிச்சரம் செய்ய என்று அனுப்பிய காசு இருக்குத்தானே?..."

ரஜிதாவின் குரல்கேட்டு

நாங்கள் எல்லோருமே அதிர்ச்சியடைந்த நிலையில் அவளையே உற்றுப் பார்த்தோம்...

"அம்மா எனக்கு கால்கள் இல்லை என்று கால் சரத்தைச் செய்யா மல் விடாதேங்கோ... நான் சுகப்பட்டு, புலி அண்ணாக்கள் போட்டுத் திரியிற மாதிரி பொய்க்கால் போடுவேன் தானே... அதுக்குப் போட்டால் நல்ல வடிவாக இருக்கும் தானே..."

அந்தக் குழந்தை சொல்லிக் கொண்டே கலகலவென்று சிரித்ததைக் கண்ட எல்லோருமே ஓவென்று கதறி அழத் தொடங்கினர்.

"ஐயோ... என்ரை பிள்ளைக்கு இப்பிடிக் கொடுமையைச் செய்து போட்டியேடி... அது உனக்கு என்ன செய்தது...?"

அந்தத் தாயின் ஓலம் வைத்தியசாலை வாட் எங்கும் எதிரொலித்த துக் கொண்டே இருந்தது...

அதற்கு மேலும் என்னால் அங்கே நிற்க முடியவில்லை... கைக்

குட்டையினால் வாயைப் பொத்தியபடி வெளியே வந்து அழுது தீர்த்து விட்டு அந்த வைத்தியசாலையைவிட்டு வெளியேறினேன்...!

ஆம்!... வடமராட்சி கிழக்குப் பிரதேச மக்கள் வைத்திய வசதி மட்டுமின்றி, போக்குவரத்து, கல்வி, பொருளாதார வாய்ப்பு எல்லாமே பின்தங்கியுள்ள நிலையிலும் அப்பழுக்கில்லாத வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருந்தனர்!...

கடலில் கடற்படையின் கொடூரத் தாக்குதல்கள், தரையிலோ பலாயில் இருந்தும், வெற்றிலைக்கேணியில் இருந்தும் ஏவப்படுகின்ற பயங்கரமான ஆட்டிலறி எறிகணைகள், போர் விமானங்களின் குண்டு வீச்சுக்களின் மத்தியிலும், அரசின் பொருளாதாரத் தடைகள், நெருக்கு தல்களின் மத்தியிலும் வாழ்ந்து துயரங்களை அனுபவிக்கும் அந்த மக்களின் வாழ்வே ஒரு பூகம்பம் தான்...!

இந்த அனர்த்தங்கள், கொடுமைகளின் மத்தியிலும் சகித்து வாழும் அந்த அப்பாவி மக்களின் குழந்தைகள் அந்தக் கிராமத்தின் எதிர்கால மனிதவளங்கள் ஒன்றல்ல... இரண்டல்ல... இருபத்தி நான்கு பள்ளிக் குழந்தைகள், சிங்கள அரசின் மிலேச்சனத்தினால் கொல்லப்பட்ட ல்லவா இருக்கின்றனர்?

இது சர்வதேசத்தின் இதயத்தை உலுப்பவில்லையா?... அல்லது சர்வதேசமே மனிதாபிமானத்தை இழந்துவிட்டதா? என்பது புரிய வில்லை...

ஆம்!... அன்று சிங்களப் பிரதேசத்தில் பஸ்வண்டியில் வந்த பள்ளிக் குழந்தைகள் பாதுகாப்பில்லாத றெயில் கடவையில், புகைவண்டி யினால் மரணமான போது, சிங்கள தேசமே கிளர்ந்தெழுந்தது...! சிங்கள அரச பாராளுமன்றம் கொதித்தெழுந்து கூக்குரல் எழுப்பியது... அதன் விளைவாக சிறீலங்காவில் உள்ள பாதுகாப்பில்லாத றெயில் கடவை க்குப் பாதுகாவலர்கள் உடனடியாக அரசினால் நியமிக்கப்பட்டனர்... ஆனால், எமது பள்ளிக் குழந்தைகள் மீது அவர்கள் தமிழர்கள் என்ற ஒரே காரணத்திற்காக "புக்காரா" மூலம் குண்டுகளை வீசிக் கொன்றொ ழிக்கும் சிங்கள தேசத்தை யாரால் தட்டிக் கேட்க முடியும்...?

அல்லல்படும் எமது மக்களை யார் தான் காப்பாற்றுவது?

"ஓயாத புயலாக வீசிய ஒடுக்குமுறையின் கோர தாண்டவம் விடுதலைப் பாதையில் எம்மைத் தள்ளிவிட்டது... இன அழிப்பின் தாங்க முடியாத நெருக்குவாரங்களின் விளைவாக நாம் ஒரு விதி செய்து கொண்டோம்... எமது தலைவிதியை நாமே நிர்ணயிக்கத் தீர்மானித் தோம். விடுதலை பெற்ற மனிதர்களாக வாழ்வதற்கு நாம் முடிவு செய்து

கொண்டோம்... எமது போராட்டத்தின் வெற்றியானது உலகத்தின் கையில் தங்கியிருக்கவில்லை... எமது வெற்றியானது எமது கையில், எமது பலத்தில், எமது உறுதிப்பாட்டிலேயே தங்கியருக்கின்றது..."

ஆம்!... பத்து வருடங்களுக்கு முன் தமிழீழத் தேசியத் தலைவர் திரு. வே.பிரபாகரன் அவர்களின் உள்ளத்தில் ஊற்றெடுத்த அந்தத் தீர்க்கதரிசனமே இன்று நிதர்சனமாக உள்ளது...!

எம்மை, எமது இனத்தை அழிக்க வருபவனை நாம் தான் தட்டிக் கேட்கவேண்டும் என்ற உறுதியும், தன்னம்பிக்கையும் ஏற்படும் வரை வல்வைப்படுகொலைகள், குமுதினிப் படுகொலைகள், நவாலிப் படுகொலைகள், நாகர்கோயில் படுகொலைகள் என்று தொடரத்தான் செய்யும்...!

**************

செய்திப் பத்திரிகைகளின் செய்திச் சிதறல்கள்

மறுமலர்ச்சி தி.மு.க. பொதுச்செயலாளர்
வை. கோபாலசாமி:

"கடந்த சில நாட்களாக சிறீலங்கா அரசு மேற்கொண்டு வரும் தாக்குதல்களால் தேவாலயங்கள் மட்டுமின்றி பாடசாலைகள் மீதும் குண்டு வீசப்பட்டுள்ளது. இதனால் பாடசாலைப் பிள்ளைகள் பலர் கொல்லப்பட்டுள்ளனர். இதனை இந்திய அரசு கண்டிக்கவில்லை. இதன் மூலம் நரசிம்மராவ் அரசு மனித நேயத்தையும், மனிதாபிமானத் தையும் புதைகுழிக்கு அனுப்பிவிட்டது என்றே எண்ணத் தோன்று கின்றது. இப்போது நடத்தப்படும் தாக்குதல்கள் விடுதலைப் புலிகளுக்கு எதிரானது என்று மட்டும் கருதக்கூடாது. ஏனெனில், தமிழீழத்தில் தற்போது பொதுமக்கள் வேறு, விடுதலைப் புலிகள் வேறு என்ற நிலை இல்லை. அவர்களைப் பிரிக்க முடியாது என்பதே உண்மை. எனவே இலங்கை அரசு தமிழர் மீதான இராணுவ நடவடிக்கைகளைக் கைவிட்டு சமாதானம் பேச்சுக்களுக்கான சூழ்நிலையை உருவாக்க வேண்டும்".

வடபிராந்திய சிகை அலங்கரிப்பாளர் சங்கங்களின் சமாசம் விடுத்த கண்டனம்.

"எதுவுமே அறியாத பிஞ்சு மழலைகள் கல்வி கற்கச் சென்றபோது கோரக் குண்டுவீச்சினால் பிய்த்தெறியப்பட்ட செயல் மிருகத்தனமான தாகும். படையினர் பாதுகாப்புடன் அலரிமாளிகைப் பூங்காவில் துள்ளி விளையாடும் தனது பிள்ளைகளுடன் இக்குழந்தைகளையும் திருமதி சந்திரிகா ஒப்பிட்டு எண்ணுவாரா? யுத்த நாகரிகம் சிறிதும் அறியாத சிறிலங்கா அரசின் இந்த மிலேச்சனத்தனமான போக்கை சர்வதேச சமூகம் கண்டு கொள்ளாமல் இருப்பது தமிழ் மக்களுக்கு இரட்டிப்பு வேதனையைத் தருகிறது. எறிகணை வீச்சு, விமானக்குண்டு வீச்சு போன்றவற்றால் தமிழ்மக்கள் சிறீலங்கா அரசினால் இன அழிப்புக்கு உள்ளாக்கப்படுகின்றனர். இதனை நிறுத்தும் வகையில் சர்வதேச சமூகம் சிறீலங்கா அரசுக்கு அழுத்தம் கொடுக்கவேண்டும்."

(ஈழநாதம் 28.09.95)

யாழ் வணிகர் கழகம் விடுத்த கண்டனம்

"வடமராட்சியில் தொடர்ச்சியாக அப்பாவி மக்கள் மீது தாக்குதல்கள் மேற்கொள்ளப்பட்டன. இதன் உச்சக் கட்டமாக நாகர்கோயில் மகாவித்தியாலயத்தின் மாணவர்கள் மீது விமானக் குண்டு வீச்சும், றொக்கற் தாக்குதலும் வேண்டுமென்றே மேற்கொள்ளப்பட்டன. இருபத்தொரு மாணவர்கள் பலியாகியதுடன் பலரை முடமாக்கிய இக்கொடூரம் எவ்வகையிலும் நியாயப்படுத்த முடியாது கண்டிக்கப்பட வேண்டியது."

(ஈழநாதம் 24.09.95)

பாடசாலைப் பிள்ளைகள் பலியானது கொடூரமான தொரு செயலாகும்
- பிரான்ஸ் பத்திரிகைகள்

வடமராட்சிப் பகுதியில் விமானக் குண்டுவீச்சுக்குப் பாடசாலைப் பிள்ளைகள் பலியாகவும், காயமடையவும் நேர்ந்தமை கொடூரமான செயல் இப்படியான செயல்களை மறைக்கவே சிறீலங்கா அரசாங்கம் செய்தித்தணிக்கையைக் கொண்டுவந்தன என பிரான்சில் இருந்த வெளிவரும் பத்திரிகைகள் செய்தி வெளியிட்டுள்ளன.
(ஈழநாதம் 20.09.95)

சிறீலங்கா பேரினவாத அரசின் இனப்படுகொலை
-இடம்பெயர்ந்த தீவக மக்கள் நலன்காக்கும் கழகம்

சிறீலங்கா அரசு, யாழ் மக்கள் மீது குறிப்பாக சின்னஞ் சிறிசுகள் மீது இனப்படுகொலையைக் கட்டவிழ்த்து விட்டுள்ளது. எமது பிள்ளைகளின் கல்வி கற்கும் பாடசாலைகள், அஞ்சி அடைக்கலம் தேடும் தேவாலயங்கள் மீதும், சிறீலங்கா அரசு தனது கொடூரக் கரங்களைப் பதிக்கின்றது. மிலேச்சத்தனமான இப்படுகொலைகளை இயற்றிவரும் சிறீலங்கா அரசு தன்னை எவ்விதத்திலும் நியாயப்படுத்த முடியாது, வரலாறு என்றுமே இவர்களை மன்னிக்கப் போவதுமில்லை, நாம் மண்டியிடப் போவதுமில்லை. எனவே இப்படுகொலைகளை எம்மண்ணில் தொடர விடாமல் தடுத்து நிறுத்தவேண்டும். சர்வதேசத்தின் பார்வையை எம்மீது திருப்புவதற்கான மக்களின் பேரெழுச்சியை வெளிக்கொணர அனைத்து மக்களும் அரசின் நடவடிக்கைக்கு எதிராக அணிதிரள வேண்டும்.

22.09.95 அன்று நாகர் கோயில் மகாவித்தியாலயத்தின் மீது, சிறீலங்கா வான்படையின் புக்காரா குண்டுவீச்சு விமானம் மேற்கொண்ட தாக்குதலில், படுகொலை செய்யப்பட்ட மாணவர்களினதும், பாடசாலைச் சுற்றாடலில் பலியான சாதாரண பொது மக்களினதும் விபரங்கள்.

| தொடர் இல | இறந்தோர் முழுப்பெயர் | வயது | தொழில் | நிரந்தர முகவரி |
|---|---|---|---|---|
| 01. | நவரத்தினசாமி உமாதேவி | 12 | மாணவி | நாகர்கோயில் மேற்கு,நாகர் கோயில் |
| 02. | செல்வகுலசிங்கம் செல்வதி | 17 | மாணவி | " |
| 03. | ஆல்போன்ஸ் அமலவிஜி | 14 | மாணவி | " |
| 04. | நாகமுத்து செந்தில்வேல் | 16 | மாணவன் | " |
| 05. | குகசரவணமலை தர்சினி | 13 | மாணவி | " |
| 06. | தம்பாப்பிள்ளை கோபிதரன் | 15 | மாணவன் | " |
| 07. | தர்மலிங்கம் உஷாநந்தினி | 12 | | நாகர் கோவில் கிழக்கு,நாகர் கோவில் |
| 08. | கிருஷ்ணகோபால் தவசீலன் | 13 | மாணவன் | " |
| 09. | இராசரத்தினம் கவிதா | 12 | மாணவி | " |
| 10. | சுந்தரலிங்கம் பழனி | 15 | மாணவன் | " |
| 11 | சுந்தரலிங்கம் தர்சினி | 06 | மாணவி | " |
| 12. | பாலச்சந்திரன் ரஜிதா | 10 | மாணவி | " |
| 13. | இராமநாதன் மேதினி | 12 | மாணவி | " |
| 14. | இராமச்சந்திரன் சங்கீதா | 15 | மாணவி | வத்திராயன் வடக்கு, தாளையடி |
| 15. | இரவீந்திரராசா அமிர்தா | 10 | மாணவி | " |
| 16. | மார்க்கண்டு நாகலோஜினி | 11 | மாணவி | ஆதிகோவிலடி வல்வெட்டித்துறை |
| 17. | தாமோதரம் சகுந்தலா | 11 | மாணவி | ஈஸ்வர் வீதி, மயிலிட்டி |
| 18. | பூலோகராசா துஷாந்தினி | 13 | மாணவி | காங்கேசன்துறை மத்தி. |

| | | | | |
|---|---|---|---|---|
| 19. | இராசரத்தினம் உமாகாந்தன் | 16 | மாணவன் | காங்கேசன்துறை மத்தி. |
| 20. | மயில்வாகனம் கணநாதன் | 12 | மாணவன் | நாகர்கோவில் கிழக்கு |
| 21. | சிதம்பரப்பிள்ளை சசிரூபி | 12 | மாணவி | " |
| 22. | அப்புலிங்கம்சண்முகநாதன் | 22 | கடற்தொழில் | " |
| 23. | மகாலிங்கம் சண்முகவடிவேல் | 15 | கடற்தொழில் | நாகர்கோவில் கிழக்கு, |
| 24. | செல்லத்துரை அருந்தவவேல் | 35 | கடற்தொழில் | உடுத்தறை வடக்கு |

22.09.95 அன்று நாகர் கோயில் மகாவித்தியாலயத்தின் மீது, சிறீலங்கா வான்படையின் புக்காரா குண்டுவீச்சு விமானம் மேற் கொண்ட தாக்குதலில், படுகாயம் அடைந்த மாணவர்களின் விபரங்கள்.

| இல. | பெயர் | வயது |
|---|---|---|
| 1. | சுந்தரராஜா காயத்திரி | 12 |
| 2. | அழகராசா முருகவேள் | 11 |
| 3. | அருமைராசா அருமைலிங்கம் | 16 |
| 4. | மதிபாலன் சுபதீஸ்வரன் | 16 |
| 5. | இராசரத்தினம் உமாகாந்தன் | 16 |
| 6. | ராஜ் ராஜிவ் (ஒருகால் துண்டிப்பு) | 11 |
| 7. | இரஞ்சித்குமார் ரஜீதா (இரண்டு கால்களும் துண்டிப்பு) | 10 |
| 8. | துரைராசா கலைவாணி | 14 |
| 9. | சந்திரலிங்கம் ஈஸ்வரி | 13 |
| 10. | கிருஷ்ணகோபால் மகேஸ்வரி | 10 |
| 11. | மதுரராணி. சு | 13 |
| 12. | தனபாலசிங்கம் கவிதா | 13 |
| 13. | அ. தனலட்சுமி | 13 |
| 14. | அன்பரசி. ப | 13 |
| 15. | அல்பேட் கலியுகச்செல்வி | 15 |
| 16. | இராசையா லோஜினி | 12 |
| 17. | ச. முருகன் | 11 |
| 18. | அ. கவிதா | 17 |

| | | |
|---|---|---|
| 19. | வ. கௌதஸ்ரீ | 13 |
| 20. | பாலசுப்பிரமணியம் சண்டியாயினி | 14 |
| 21. | செ. செல்வகுமார் | 12 |
| 22. | அ. ரேணுகாயினி | 12 |
| 23. | எஸ். தங்கநாதன் | 17 |
| 24. | ஜி. காயத்திரி | 14 |
| 25. | ரி. கலைவாணி | 14 |
| 26. | சசிரூபி. இ | 13 |
| 27. | எஸ். செல்வகுமார் | 12 |
| 28. | ஜோன்சன் ஜெயசித்திரா | 01 |
| 29. | எஸ். சந்திரன் | 11 |
| 30. | நொயிலின் மரியசுரேதா | 15 |
| 31. | அருள் மகாதேவன் | 09 |
| 32. | ர. சமித்தா | 16 |
| 33. | நவமணி மிதுரா | 14 |
| 34. | எஸ். செல்வம் | 16 |
| 35. | என். ராகவன் | 16 |

22.09.95 அன்று புக்காரா விமானம் வட்டமிட்டுக் கொண்டிருக்கும் பொழுது, அச்சம் காரணமாக, பாடசாலையில் இருந்து தங்கள் பிள்ளைகளை அழைத்துச் செல்வதற்கு வந்து, பாடசாலை மீது வீசப்பட்ட குண்டுகளால் படுகாயமடைந்த பெற்றோர்களின் விபரங்கள்.

| இல. | பெயர் | வயது |
|---|---|---|
| 1. | அமிர்தலிங்கம் கமலாதேவி | 32 |
| 2. | அருணாசலம் முருகுப்பிள்ளை | 67 |
| 3. | கதிரிப்பிள்ளை ஆனந்தசிவம் | 45 |
| 4. | வ. மகாலட்சுமி | 45 |
| 5. | நாகமுத்து பார்வதி | 45 |
| 6. | ஆறுமுகம் சுந்தரலிங்கம் | 45 |
| 7. | க. இராசதுரை | 24 |
| 8. | செபமாலை. ம | 53 |
| 9. | நா. இராசலிங்கம் | 44 |
| 10. | தி. கணபதிப்பிள்ளை | 40 |

| | | |
|---|---|---|
| 11. | கே. உதயகுமார் | 31 |
| 12. | எஸ். நேசரஞ்சினி | 23 |
| 13. | சுந்தரலிங்கம் நாகலட்சுமி | 42 |
| 14. | தம்பிராசா. தி | 38 |
| 15. | கோகிலாதேவி | 47 |
| 16. | ஜே. தவமணிதேவி | 39 |
| 17. | எஸ். வர்ணகுலசிங்கம் | 35 |
| 18. | கே. லோகராசா | 40 |
| 19. | எஸ். சாரதா | 45 |
| 20. | ஏ. ஜெயராணி | 53 |
| 21. | ஜோசப் ஜோன்சன் குயிலிதேவி | 42 |
| 22. | அ. நாதன் | 23 |

**************

